# மங்கை

மார்ச் 1993

☆ கோடியாய் பெருக வைக்கும் கோடீஸ்வரர் (அருள்வலம்)

☆ உருளைக் கிழங்கு அல்வா (சமையற்கலை)

☆ சென்னையில் வீட்டுக்கு வீடு 'ஆவின்'

☆ ராணுவத்தில் பெண்கள்

☆ நாணய வரலாறு

☆ 4 சிறு கதைகள்

☆ 4 கட்டுரைகள்

---

மற்றும் வழக்கமான பகுதிகள் அனைத்தும்

விலை ரூ. 6/-



# அம்புலிமாமா

மார்ச் 1993



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 4-00.

வருட சந்தா ரூ. 48-00.

**Statement about ownership of AMBULIMAMA (Tamil)**
**Rule 8 (Form VI), Newspapers (Central) Rules, 1956**

| | |
|---|---|
| *1. Place of Publication* | 'CHANDAMAMA BUILDINGS'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *2. Periodicity of Publication* | MONTHLY<br>Ist of each calender month |
| *3. Printer's Name* | B.V. REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Prasad Process Private Limited<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *4. Publisher's Name* | B.VISWANATHA REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | Chandamama Publications<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *5. Editor's Name* | B.NAGI REDDI |
| *Nationality* | INDIAN |
| *Address* | 'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |
| *6. Name and Address of individuals who own the paper* | CHANDAMAMA PUBLICATIONS<br>PARTNERS:<br>1. Sri B. VENKATRAMA REDDY<br>2. Sri B.V. NARESH REDDY<br>3. Sri B.V. SANJAY REDDY<br>4. Sri B.V. SHARATH REDDY<br>5. Smt. B. PADMAVATHI<br>6. Sri B.N. RAJESH REDDY<br>7. Smt. B. VASUNDHARA<br>8. Kum. B.L. ARCHANA<br>9. Kum. B.L. ARADHANA(Minor)<br>(Minor admitted to the benefits of Partnership)<br><br>'Chandamama Buildings'<br>188, N.S.K. Salai<br>Vadapalani, Madras-600 026 |

I, B Viswanatha Reddi, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*1st March 1993*

**B. VISWANATHA REDDI**
*Signature of the Publisher*

# அம்புலிமாமா

நிறுவனர்: 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர்: நாகி ரெட்டி




## மனித உயர் பண்புகளை மீண்டும் நிலை நிறுத்துவோம்

இன மதக்கலவரங்களிலிருந்து இப்போதுதான் சற்று விடுபட்டு நம் நாடு மூச்சுவாங்கத் தொடங்கியுள்ளது. நாற்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன் பிரிவினைக்கு முன்னும் அடுத்தும் நிகழ்ந்த கலவரம் போல இப்போதுதான் பார்க்கிறோம்.

அப்போதைய கலவரங்கள் முற்றிலும் அரசியல் அடிப்படையானவை. சுமார் ஐயாயிரம் ஆண்டுகளாக ஒன்றாக இருந்த நாடு இரண்டாகப் பிரிக்கப்பட்டது. இது மத அடிப்படையிலானாலும் அரசியல் நிலையாலும் அவ்வாறு செய்ய வைத்தது. மக்களும் பிரிவினை தான் ஒரே வழி என ஏற்றனர்.

அப்போதிருந்து நாட்டு மக்களிடையே அமைதியும், நட்புறவும் சகோதர மனப்பான்மையுமே இருக்கும் என எதிர்பார்த்தனர். பரந்து கிடக்கும் நாட்டின் வாழும்முறை இயற்கை அமைப்பில் வேற்றுமை இருந்தாலும் எங்கும் ஒற்றுமை நிலவி நம் நாட்டின் உயரிய பண்பாட்டிற்கு எடுத்துக்காட்டாக விளங்கி வருகிறது.

இப்படி இருந்தும் மனிதன் மனிதனையே ஏன் வெறுக்க வேண்டும்? மனத்திலும் எண்ணத்திலும் வெறுப்பு தோன்றினால் வன்முறைத் தலைதூக்குகிறது என்பது யாவரும் சொல்லி வருவதே. மனிதனுக்கோ அவன் வாழ்விற்கோ சற்றும் மதிப்பு தராமல் இருப்பது என்ன மடமை! இப்படி நடப்பது சரியல்ல என எல்லா மதங்களும் எச்சரிக்கின்றன. எனவே மனித உயரிய பண்புகளை மீண்டும் நிலைநாட்டப் போரிட வேண்டும்.

நம் குடியரசுத் தலைவர் திரு சங்கர் தயாள் சர்மா அண்மையில் மாணவர்களுக்கு நம் உயரிய பண்பாட்டையும் எண்ணங்களையும் பற்றிக் கூறி அவை தொன்று தொட்டு இருப்பவை எனவும் அன்பு, ஒற்றுமை, அஹிம்சை, பொதுப்பணி இவற்றைத் தம் நோக்கமாக்கிக் கொள்ள வேண்டும் எனவும் உரைத்ததை மனதில் கொள்வோம்.

மதிமுகம்: 92 மார்ச் 1993 புன்னகை: 3

தனிப்பிரதி: ரூ. 4-00 வருட சந்தா: ரூ. 48-00



# 'சந்தமாமா'விற்கு தேசிய விருது

உங்களது இந்த அபிமானப் பத்திரிகைக்குப் புத்தாண்டுப் பரிசாக மகராஷ்டிரா வின் இசல்கரன்ஜி எப். ஐ. ஏ. நிறுவனம் அளித்த கேடயமும் பரிசுத்தொகை ரூ. 25.000/- கொண்டதை தேசீய விருதாக அளித்தது போல வேறு எந்தப் பரிசு தான் இணையாகும்! இது டிசம்பர் 27ல் ஒரு மகத்தான விழாவாக நடத்தி அளிக்கப்பட்டது.

இதில் கூறப்பட்ட பாராட்டுரை வருமாறு:

எல்லாக் குழந்தைகளும் பெற்றோர்களும் சந்தமாமாவை விரும்புகிறார்கள். இந்த மாதப் பத்திரிகை ஒவ்வொரு குடும்பத்தின் பிரிக்க முடியாத அங்கமாகி விட்டது. அமரர் திரு சக்கரபாணி குழந்தைகளுக்கு நீதி போதிப்பதால் பெற்றோர் கள் கடமையை செய்யத்தக்க விதத்தில் ஒரே புதிய சாதனமாக ஒரு மாதப்பத் திரிகையை உருவாக்கினார். இந்த உயரிய நோக்கத்தைப் பரப்ப தற்போதைய நிர்வாக ஆசிரியர் திரு. பி. நாகிரெட்டி பொறுப்பேற்று சந்தமாமாவை 12 மொழி களிலும் பிரெயிலிலும் வெளியிட்டு வருகிறார்.

"சந்தமாமா தன் வண்ண அமைப்புடன் குழந்தைகளுக்கும் பெண்களுக்கும் கல்வித் துறையில் ஆர்வம் கொள்ளச் செய்து ஆயிரக் கணக்கான கதைகளையும், தொடர்கதைகளையும் புராணம், நாட்டுப்புறக்கதைகள் மற்றும் வரலாறுகள் போன்றவற்றை அளித்து வருகிறது. அது இந்தியாவின் இளையதலைமுறை யினருக்கு அவர்கள் எங்கிருந்தாலும் எம் மொழியைப் பேசினாலும் எல்லோரும் ஒரே நாட்டவர் என்றும் ஒன்றுபோல நினைப்பவர்கள் எனவும் கூறுகிறது. நம் நாட்டில் வேற்றுமைகளில் ஒற்றுமையைக் காண்கிறோம் என அது முழுமையாக நம்பி நம் இளைய தலைமுறையை தேசிய ஒருமைப்பாட்டைப் பற்றிச் சிந்திக்க வைத்து செயல்பட வைக்க முயல்கிறது."

நாங்கள் நான்கு தலைமுறைகளாய் செய்யும் நற்பணி என்று நாங்கள் கூற விரும்பியதை எப்ஐஏ நிறுவனம் எடுத்துக் கூறியுள்ளது பற்றி நாங்கள் பெருமை கொள்கிறோம். இந்த நிறுவனம் கடந்த இருதலைமுறைகளில் விஞ்ஞானம், பொறிஇயல், தொழில்துறை, நிர்வாகம், கலை, பண்பாடு, வேளாண்மை விளை யாட்டு ஆகியத் துறைகளில் அரிய பணிபுரிந்து வருபவர்களைப் பாராட்டி வரு கிறது. தேசிய ஒருமைப்பாட்டிற்காக வெவ்வேறு துறைகளில் பாடுபட்டு வரும் பிரமுகர்களை இது மக்களுக்கு விரிவாக நன்கு அறிமுகப்படுத்துகிறது.

நாம் இந்த மகிழ்ச்சியை எங்களைப் பாராட்டி அன்பு காட்டி வரும் உங்களோடு பகிர்ந்து கொள்ளவே விரும்புகிறோம்.

**பி. விஸ்வநாதரெட்டி,**
*சந்தமாமா பப்ளிகேஷன்ஸ்*

# புதிய அமெரிக்க அதிபர்

BILL CLINTON



அரகன்சாஸ் மாநில முன்னாள் ஆளுனரும் நாற்பத்தாறு வயதுமான பில் க்ளின்டன், அமெரிக்காவின் 42வது அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதிபர் பதவிக்கு சென்ற நவம்பர் 3ந் தேதி நடந்த தேர்தலில் இவர் அதிபர் ஜார்ஜ் புஷ்ஷைத் தோற்கடித்து வெற்றி பெற்றார். அமெரிக்காவின் ஐம்பத்தைந்து சத வாக்காளர்கள் அதாவது பத்து கோடி மக்கள் அந்த வாக்களிப்பில் கலந்து கொண்டனர். இதில் 44 சதம் வாக்குகள் க்ளின்டனுக்கும் 39 சத வாக்குகள் புஷ்ஷுக்கும் 17 சத வாக்குகள் சுயேட்சை வேட்பாளர் ராஸ் பெரோட்டுக்கும் கிடைத்தன.

சமீப காலத்துள் முதன்முதலாக க்ளின்டனின் தலைமையிலான ஜனநாயகக் கட்சி வெள்ளை மாளிகையையும் யு.எஸ். காங்கிரசிலும் அதிகாரத்தைக் கைப்பற்றியது. அமெரிக்க வரலாற்றில் ஜன நாயகக் கட்சி 16 ஆண்டுகளுக்கு ஒருமுறை அமெரிக்க அதிபர் பதவியை அடைந்து வருகிறது. 1960ல் ஜான் கென்னடியும், 1976ல் ஜிம்மி கார்ட்டரும், 1992ல் பில் க்ளின்டனும் ஜனநாயகக் கட்சியின் சார்பில் போட்டியிட்டு அதிபர்களானார்கள்.

இந்த ஆண்டு ஜனவரி 20ந் தேதி பதவி ஏற்ற அதிபர் க்ளின்டன் உடனே பேசுகையில் தாம் தேர்தலின் போது அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றப் போவதாக நாட்டு மக்களுக்கு உறுதி கூறினார். நாளுக்கு நாள் மோசமாகும் பொருளாதார நிலையை உயர்த்தி நாட்டின் முன்னேற்றத்திற்கான பொருளாதாரத் திட்டங்களை வகுக்கப் போவதாகவும் அறிவித்தார். ஏதோ மாய மந்திரத்தால் ஒரே நாளில் மாற்றங்களைச் செய்து விடமுடியும் என்று மக்கள் எதிர்பார்க்கக் கூடாது என்றும் நாட்டின் 25 கோடி மக்களின் ஒவ்வொருவரின் உடல் நலனைப் பாதுகாக்கவும், கல்வித் துறையை விரிவாக்கி மாணவர்கள் தம் படிப்பைத் தொடரக் கடன் வசதிகளைச் செய்வதாயும், சுற்றுப்புறச் சூழ்நிலை மாசு படாமல் தடுக்கப் பாடுபடுவதாயும் அவர் உறுதி அளித்தார்.

அமெரிக்க வாழ்க்கை முறையில் மாறுதல்களைச் செய்ய வேண்டும் என்று க்ளின்டன் பிரசாரம் செய்தார். அதுவே அவரது வெற்றிக்கு உதவியது. "பல இனங்கள் மொழிகள் கொண்டது நம் நாடு. இதைப் பலப்படுத்த வேண்டும். இவ்வாறு வேறுபாடுகளால் நாடு பலஹீனமாகி விடக்கூடாது" என அவர் கூறினார்.

இன்னொரு சந்தர்ப்பத்தில் அவர் "நம் நாட்டில் மக்கள் ஆண் பெண் என்ற வேறுபாடு இன்றி உயர்வு, தாழ்வு என்று பாராமல் கடவுள் நமக்கு அளித்த சக்தியை முழு

வதுமாய் நல்ல விதத்தில் பயன்படுத்தி நம் வாழ்க்கையை சுகமயமாக ஆக்கிக் கொள்ள வேண்டும் என்பதே என் நோக்கம். நாட்டிலுள்ள இனங்கள் நம்மிடையே பிளவை ஏற்படுத்தக் கூடாது. ஒற்றுமைக்கான வழி காண வேண்டும்'' என்று உரைத்தார்.

AL GORE



க்ளின்டன் பிறப்பதற்கு இரண்டு மாதங்களுக்கு முன்பே அவரது தந்தை ஜெபர்சன் ஒரு கார் விபத்தில் இறந்து போனார். இவரது தாய் ரோஜர் க்ளின்டன் என்பவரை மணந்து கொண்டார். க்ளின்டன் உபகாரச் சம்பளத்தில் படித்து வாஷிங்டனிலுள்ள ஜார்ஜ் டௌன் பல்கலைக் கழகத்தில் பட்டம் பெற்றார். மதிப்புமிக்க ரோட்ஸ் உபகாரச் சம்பளம் பெற்று ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் சேர்ந்து தத்துவம், அரசியல் ஆகியவற்றைப் பயின்றார். இதற்குப் பின் அமெரிக்கப் பல்கலைக் கழகத்தில் சட்டக் கல்வி பயின்றார்.

இவர் முதலில் யு.எஸ். காங்கிரசில் போட்டி போட்டபோது வெற்றி பெறவில்லை. இரண்டாவது முறையில் அரகன்சாஸ் அட்டர்னி ஜெனரலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அதன்பின் ஆளுனர் ஆனார். பின்னர் தோற்றாலும் அடுத்த முறையில் மீண்டும் போட்டியிட்டு வெற்றி பெற்றார்.

இரண்டாவது உலகப் போருக்குப் பின் பிறந்த இவர்தான் இவ்வகையில் முதல் அதிபவாரார். ஐம்பது வயதிற்குள் இந்த உயர் பதவியை வகித்தவர்களில் இவர் ஆறாவது இடம் பெறுகிறார். 1901ல் தியோடர் ரூஸ்வெல்ட் தமது 42வது வயதில் அமெரிக்க அதிபரானவர். க்ளின்டனின் மனைவி ஹில்லரி க்ளின்டன் அமெரிக்காவில் புகழ் பெற்ற வழக்கறிஞர். இவர் குழந்தை இலக்கியப் பணியும் புரிகிறார். க்ளின்டன் தம்பதிகளின் ஒரே மகள் பனிரெண்டு வயதான செல்ஸி. இவள் பப்ளிக் ஸ்கூலில் படித்து வருகிறாள்.

அமெரிக்கத் துணைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எல்கோர் அதிபர் க்ளின்டனை விட இரண்டு வயது சிறியவர். சுற்றுப்புற சூழ்நிலைப் பாதுகாப்பிற்காகப் பாடுபடும் இவர் ரியோடிஜானிரோவில் நடந்த பூவுலகப் பாதுகாப்பு உச்சி மாநாட்டில் கலந்து கொண்ட அமெரிக்கக் குழுவின் தலைவராகச் சென்றார்.

**பில் க்ளின்டனைப் பற்றிய மேலும் சில விவரங்கள்**

- இவருக்கு விளையாட்டுகளில் விருப்பம். கோல்ப் இவரது பிரியமான விளையாட்டு.
- சினிமாக்களில் மிகுந்த விருப்பம்.
- ஐஸ்கிரீம், மாங்காய் ஜெல்லி மிகவும் பிடிக்கும்.
- பனிப்போருக்குப் பின் பிரச்னைகளை சமாளிக்க நாட்டு மக்களின் கவனத்தை ஈர்க்க வேண்டும் என்பது அவரது நோக்கம்.




# பரிசு யாருக்கு?

கங்காபுரத்தை ஆண்ட காந்த சேனன் தன் பட்டத்து யானை மீது உயிரையே வைத்திருந்தான். அவன் அதன் மீது அமர்ந்து பல போர் களைப் புரிந்து வெற்றி பெற்ற வன். அதனால் அதன்மீது அமர்ந்து பெருமையாக அவ்வப்போது நகர வீதிகளில் வருவான்.

ஒருநாள் அவன் அந்த யானை மீது அமர்ந்து சென்றபோது அது திடீரெனக் கத்திக் கீழே விழுந்து துடிதுடித்தது. காந்தசேனன் சட் டென யானை மீதிருந்து கீழே குதித் தான். அவன் யானைப்பாகனிடம் அதற்கு என்ன ஆயிற்று என்று கேட்டான். பாகனுக்கோ யானை ஏன் அப்படி துடிக்கிறது என்று தெரியவில்லை.

அப்போது மன்னன் தன் ஆஸ் தான மிருக வைத்தியரான முகுந் தய்யாவை அழைத்து வரச் சொன் னான். அவரும் வந்து யானையைப் பரீட்சித்துப் பார்த்து விட்டு "அரசே! இப்போது யானைக்கு நரம்பு சம்பந்தமான ஒரு விசித்திர வியாதி வந்துள்ளது. இந்த நோய் கண்ட மிருகம் பிழைப்பது மிகவும் கடினமே, ஆனால் நிறையப் பணம் செலவு செய்து சிகிச்சை அளித் தால் தக்க மருந்துகளைக் கொடுத்து இந்த நோயைப் போக்கிவிட முடி யும்" என்றார்.

மன்னனோ "எனக்கு இந்த யானைதான் முக்கியம். பணம் எவ் வளவு செலவானாலும் கவலை இல்லை. அதனால் சிகிச்சையை உடனேயே ஆரம்பியுங்கள்" என் றான். முகுந்தய்யாவும் அந்த யானை யைப் படுக்க வைக்க ஓரிடத்தில் பெரிய கூடாரம் போடச் செய்து அதில் அந்த யானையைச் சேர்ப் பித்துத் தன் சிகிச்சையை ஆரம்

—சிவனார் செல்வன்—

பித்தார்.

அவர் பல அபூர்வ மூலிகை களையும் வேர்களையும் பட்டை களையும் சேகரித்து இடித்து லேகி யங்கள் செய்து அவற்றை முறைப் படி யானைக்குக் கொடுத்து விழுங் கச் செய்தார். இப்படியாக ஒரு மாதம் கழிந்தது.

யானையின் உடல் நிலையில் எவ்வித மாற்றமும் ஏற்படவில்லை. அதுகண்டு மன்னன் வைத்தியரி டம் ஏன் ஒருமாறுதலும் ஏற்பட வில்லை என்று கேட்கவே வைத் தியரும் "அரசே! யானையின் உட லுக்குள் மாறுதல் ஏற்பட்டு நல்ல விதமாகத் தேறி வருவதை நான் காண்கிறேன். வெளிப்புறமாய் மாறுதல்கள் இன்னும் சில நாட் களில் ஏற்பட்டு யானையும் முன் போல எழுந்து கம்பீர நடை போட்டு விடும் எனவே சற்றுப் பொறுத் திருக்குமாறு கேட்டுக் கொள்கி றேன்" என்றார்.

இதைக்கேட்ட மன்னன் திருப்தி அடையாமல் முகத்தைச் சுளித் தான். அப்போது யானையை வேடிக்கை பார்க்க நின்றவர்களில் ஒருவன் மன்னனிடம் வந்து "அரசே! இதுவரை அளிக்கப்பட்ட சிகிச்சை யால் யானைக்கு எவ்வித பலனும் ஏற்படவில்லை என்றே நான் நினைக்கிறேன் எனக்கு வாய்ப்பு அளித்தால் நான் இதனைக் குணப் படுத்துகிறேன்" என்றான்.

அப்போது முகுந்தைய்யா "ஓ! நீயா! உனக்கு வைத்திய சாஸ்திரம்



கற்க வராது எனக் கூறித்தானே விரட்டினேன். நீயா இதனை குணப்படுத்தப் போகிறாய்?'' என்று ஏளனமாகக் கேட்டார். அவனும் மன்னனிடம் "என் பெயர் ராமய்யா. நான் இவரிடம் சீடனாக இருந்தவன். ஆனால் நோயாளியை குணப்படுத்த இவரது முறைகள் சரியல்ல என்று கருதுப்வன்'' என்றான்.

காந்தசேனனும் சற்று யோசித்து விட்டு ராமய்யனிடம் "சரி. நீ உன் முறைப்படி சிகிச்சையை ஆரம்பி'' என்றான். ராமய்யனும் "இந்த யானையை தாமரை மலர்கள் நிறைந்த குளத்தருகே கொண்டு போகிறேன். நீங்கள் உங்கள் கட்டுத் தறியிலுள்ள மற்ற யானைகளை அக்குளத்தில் தினமும் குளிக்க அனுப்புங்கள். அவற்றோடு சேர்ந்து இந்த யானையும் குளிக்கட்டும். ஒரே வாரத்தில் யானை குணமடைந்து விடும்'' என்றான். மன்னனும் அவ்வாறே செய்ய அனுமதித்தான்.

ஒரு வாரகாலம் தினமும் பட்டத்து யானை மற்ற யானைகளோடு சேர்ந்து அந்தக் குளத்தில் குளித்தது. அது முன்போலாகி நன்கு நடந்து வருவது கண்டு மன்னன் ஆச்சரியப்பட்டான். அவன் ராமய்யாவைப் பாராட்டி "பேஷ்! உன் முறை அற்புதமானது. அதனால் என் பட்டத்து யானை குணமடைந்து முன்போலாகிவிட்டது. நாளை உன்னை என் தர்பாரில்





கௌரவிக்கிறேன்'' என்றான்.

அப்போது முகுந்தய்யா 'இந்த யானை ஒன்றும் இவனது சிகிச்சையால் குணமடைந்துவிடவில்லை. நான் கொடுத்த மருந்துகளால் குணமடைந்து கொண்டே வந்து முடிவில் இந்த ஒரு வாரத்தில் பூரண குணம் அடைந்து விட்டது அதனால் இதற்காகப் பரிசு கொடுப்பது எனத் தீர்மானித்தால் அப் பரிசு எனக்கே கிடைக்க வேண்டும்'' என்றார்.

ராமய்யனோ ''அதெல்லாம் இல்லை. என் ஒருவார சிகிச்சையால்தான் யானை குணமடைந்தது. அதனால் எனக்குத்தான் பரிசு'' என்றான். மன்னனும் ''சரி, நாளை நீங்கள் இருவருமே தர்பாருக்கு வந்து விடுங்கள். பரிசு யாருக்கு என்பதை அங்கே முடிவு செய்யலாம்'' என்று கூறிவிட்டுச் சென்றான்.

மறுநாள் தர்பாரில் மன்னன் இரு வைத்தியர்களைப் பற்றிக் கூறி யானையை குணப்படுத்தியதற்காக இந்த இருவரில் யாருக்குப் பரிசளிப்பது? என்று தன் அமைச்சர்களைப் பார்த்துக் கேட்டான். ஒரு அமைச்சர் முகுந்தைய்யாவுக்கே என்றார். இன்னொரு அமைச்சரோ ராமய்யாவுக்குத்தான் பரிசு என்றார்.

அப்போது சுபுத்தி என்ற அமைச்சர் ''அரசே! இருவருக்கும் பரிசளிப்பதே சரி'' என்று கூறினார். அது கேட்ட மன்னன் ''ஏன் அப்படிக் கூறுகிறீர்கள்?'' என்று கேட்டார்.

சுபுத்தியும் ''அரசே! யானைக்கு இருவரும் சிகிச்சை அளித்தார்கள். ஒருவர் யானையின் உடல் அமைப்பை வலுப்படுத்த மருந்துகள் கொடுத்தார். இன்னொருவர் அதன் மனம் அறிந்து தம்முறையில் சிகிச்சை அளித்தார். எனவே யானை குணம் அடைந்தது மருந்துகளால் மட்டும் என்றோ மனோதத்துவ முறைப்படி மட்டுமே என்றோ கூறிவிட முடியாது. இரு முறைகளாலுமே என்றுதான் கூற வேண்டும்'' என்றார்.

மன்னனும் "ஆ! இப்படியும் இருக்கலாம். தாங்கள் ஒருபுதிய பார்வையில் இப்பிரச்னையை அணுகுகிறீர்கள். இன்னும் சற்று விவரமாகக் கூறுங்கள்" என்றான்.

சுபுத்தியும் "ஒரு நோயாளி உடலாலும் மனத்தாலும் பாதிக்கப் பட்டே நோய் வாய்ப்படுகிறான். உடலின் வலுகுறைய நோயை எதிர்க்கும் சக்தி உடலுக்குக் குறை கிறது. எனவே நோயை எதிர்க்க உடலுக்கு வலுவூட்ட வேண்டும். ஆனால் இதுமட்டும் போதாது. தான் குணமடைந்து வருவதாக நோயாளியின் மனம் நினைத்து முந்தைய சூழ்நிலைக்குத் திரும்ப வேண்டும். இந்த இரண்டு அம்சங் களும் சேர்ந்து செயல்பட்டாலே நோயாளி குணமடைவான். யானை நரம்புகளால் பாதிக்கப்பட்டதால் உடல் வலுவை இழந்தது. அது தன்னால் எதுவும் செய்ய முடிய வில்லையே என்று மனச்சோர் வும் அடைந்துவிட்டது. உடலில் வலுவூட்ட முகுந்தய்யா யானைக்கு மருந்துகளைக் கொடுத்து உடலில் வலுவூட்டினார். மனச்சோர்வைப் போக்க யானையைக் குளத்திற்குக் கொண்டு போய் மற்ற யானை களுடன் இருக்கவிட்டு முந்தைய நிலைக்கு ராமய்யா கொண்டு வந்தார். அதனால் யானை இருவ ரின் சிகிச்சை முறைகளால் குண மடைந்து விட்டது. அதனால் இரு வருக்கும் பரிசளித்து கௌரவிப் பதே சரியாகும்" என்றார்.

மன்னனும் "ஆஹா! இதுதான் சரியான தீர்ப்பு. மேலும் நோயாளி எப்படி குணம் அடைகிறான் என் பதை யாவரும் நன்கு அறியும்படி விளக்கினீர்கள். நீங்கள் கூறிய படியே இரு வைத்தியர்களுக்கும் பரிசளித்து கௌரவிக்கிறேன்" என்றான்.

அதுகேட்டு இரு வைத்தியர் களும் மகிழ்ந்து போயினர்.



# ஒரே நோயாளி!

நகரத்திற்குப் போய்விட்டுத் தன் கிராமத்திற்கு சோலையப்பன் திரும்பி வந்து கொண்டிருந்தான். வழியில் பழனியப்பன் என்பவனைக் கண்டான். அவனும் அதே கிராமத்திற்குத்தான் போய்க் கொண்டிருந்தான்.

சோலையப்பன் பேசுவதில் மன்னன். ஒரேயடியாக அளப்பான். அவன் பழனியப்பனிடம் "எங்கள் ஊரில் எல்லோரும் ஆரோக்கியமாக இருப்பவர்கள். நோயாளி என்று யாருமே கிடையாது" என்று பெருமை அடித்துக் கொண்டான்.

பழனியப்பனும் "ஆச்சரியமாக இருக்குறதே. ஒரு நோயாளி கூட இல்லையா?" எனக்கேட்டவாறே நடந்தான். இருவரும் அவர்கள் போய்ச் சேர வேண்டிய கிராமத்தை அடைந்தார்கள்.

அப்போது ஒரு வீட்டுத் திண்ணையில் ஒருவன் படுத்து முனகிக் கொண்டிருந்தான். அவன் நிலை மோசமாக இருந்தது. உயிர் எந்த நிமிடத்தில் போகுமோ என்றிருந்தது. அப்போது பழனியப்பன் "இதோ ஒரு நோயாளி. இவனுக்கு ஏன் இப்படிப்பட்ட நோய் வந்தது?" என்று கேட்டான்.

சோலையப்பனும் "இவன் நோயாளி இல்லை. இவ்வூர் வைத்தியன். வைத்தியம் செய்ய இங்கு ஒரு நோயாளியும் கிடைக்காததால் வரும்படி இல்லாமல் வறுமையில் வாடி இந்தநிலைக்கு வந்து விட்டான்" என்று சாமர்த்தியமாகப் பதில் கூறி சமாளித்தான்.






*[இளவரசியை மாயமாளிகையிலிருந்து வேறு எங்கோ கொண்டு செல்லப் போகிறார்களென மகேந்திரன் அறிந்து கொண்டான். அன்றிரவே அவன் மாளிகைக்குள் போய் வித்தியாவதியிடம் விஷயத்தைக் கூற அவளும் உடனேயே அங்கிருந்து வெளியே போய்விடத் தயாரானாள் மகேந்திரன் அவளை அழைத்துக் கொண்டு வெளியேறினான். பிறகு—]*

**கி**ழவி அதிகாலையில் எழுந்து தன் எஜமானனின் கட்டளைப்படி-இளவரசியின் பயணத்திற்கான ஏற்பாடுகளைச் செய்ய வித்தியாவதியின் அறைக்குச் சென்றாள். அங்கு அவள் இல்லாதது கண்டு திடுக்கிட்டுப் பக்கத்து அறைகளில் தேடிப் பார்த்தாள். அங்கும் தென்படவில்லை. அதனால் பரபரப்புடன் இளவரசியின் பணிப்பெண்ணான மாலினியின் அறைக்குள் ஓடினாள்.

இன்னும் சற்று நேரத்தில் பல்லக்கு வந்துவிடும். அதில் இளவரசியை ஏற்றி அழைத்து வரவேண்டும் என்பது எஜமானனின் கட்டளை. இளவரசி இல்லாது எப்படிப் போவது? அவளுக்குச் சட்டென ஒருவழி தோன்றியது. தூங்கிக் கொண்டிருந்த அவளை எழுப்பி



அழைத்துக் கொண்டு கண்ணுக்குத் தெரிந்த ஒரு வழியில் அழைத்துச் சென்றான். அவன் திரும்பித் திரும்பிப் பார்த்தவாறே யாரும் தம்மைப் பின் தொடரவில்லை என்று உறுதி செய்து கொண்டே சென்றான்.

திடீரெனச் சற்று தூரத்தில் பல்லக்குத் தூக்கிகளின் பாட்டு கேட்கவே மகேந்திரன் வித்தியாவதியின் கையைப் பற்றி இழுத்துக் கொண்டு ஒரு அடர்ந்த புதரின் பின் போய் ஒளிந்து கொண்டான். சற்று நேரத்தில் ஒரு பல்லக்கு அவர்களிருந்த இடத்தைக் கடந்து சென்றது. அதில் யார் சென்று கொண்டிருப்பார்கள் என்று மகேந்திரனும் வித்தியாவதியும் யோசிக்கலானார்கள்.

சூரியோதயம் ஆகும்போது பல்லக்கு சமமான தரைப்பகுதியை அடைந்தது. அங்கு வேறு ஒரு பல்லக்கு தயாராகக் காத்திருந்தது. அதைச் சுமந்து செல்ல ஆட்கள் தயாராக இருந்தார்கள். அவர்களுக்குச் சற்று தூரத்தில் மூன்று பேர்கள் குதிரைகளின் மீது அமர்ந்து காத்திருந்தார்கள்.

அவர்களில் ஒருவன் கிழவியை அணுகினான். அப்போது அவள் "எஜமானர் எங்கே? அவரிடம் நான் பேச வேண்டும்" என்றாள். அவனும் "எஜமானர் எங்கள் வருகைக்காக இன்னொரு இடத்தில்

விலையுயர்ந்த ஆபரணங்களையும் ஆடைகளையும் அணிந்து கொண்டு எதுவும் பேசாமல் தன்னுடன் வர வேண்டும் என்றும் அது எஜமானனின் கட்டளை என்றும் தெரிவித்தாள். மாலினியும் அதன்படியே நடந்தாள்.

சற்று நேரத்தில் பல்லக்கும் வந்தது. கிழவி மாலினியை அதற்குள் ஏற்றி உட்கார வைத்தாள். அவள் தானும் அதன் பின்னாலேயே வருவ்தாகக் கூறிக் கீழே இறங்கினாள். பல்லக்கு தூக்கிகள் பல்லக்கைச் சுமந்து செல்ல அதன்பின் கிழவி நடந்து சென்றாள்.

மாயமாளிகையிலிருந்து வெளியேறிய மகேந்திரன் இளவரசியை

காத்துக் கொண்டிருக்கிறார். இளவரசியை பத்திரமாக அழைத்து வரும்படி அவர் கட்டளை இட்டிருக்கிறார்'' என்றான்.

''அப்படியானால் நான் என்ன செய்ய வேண்டும்?'' என்று கிழவி கேட்கவே அவனும் ''இளவரசியை பத்திரமாக எஜமானரிடம் கொண்டு போய்ச் சேர்ப்பது என் பொறுப்பு. நீ கவலைப்படாமல் இளவரசியை எங்கள் பல்லக்கில் ஏற்றிவிட்டு நீ இளவரசி ஏறிவந்த பல்லக்கில் உட்கார்ந்து கொண்டு திரும்பி மாளிகைக்குப் போ. இதுதான் எஜமானரின் கட்டளை'' என்றான்.

கிழவி பல்லக்கருகே போய் மாலினியிடம் ''உன்னை எஜமானர் அந்தப் பல்லக்கில் ஏறிப் போகும்படி கட்டளை இட்டிருக்கிறார். நீ யாரிடமும் எதுவும் பேசக்கூடாது. நீ எதற்கும் கவலைப்பட வேண்டாம் தைரியமாகப் போ'' என்றாள். மாலினியும் சரி எனவே கிழவி அவளை அந்தப் பல்லக்கிலிருந்து இறக்கி அழைத்துக் கொண்டு மற்ற பல்லக்கிற்குச் சென்றாள்.

அதில் அவளைக் கிழவி ஏற்றி விடவே அதைச் சுமந்து கொண்டு ஆட்கள் கிளம்பினார்கள். அந்த மூன்று குதிரை வீரர்களும் அந்தப் பல்லக்கின் பின்னால் சென்றனர். அவர்கள் போனபின் கிழவிதான் பின் தொடர்ந்து வந்த பல்லக்கில்



ஏறி உட்கார, அவளைச் சுமந்து கொண்டு மாயமாளிகைக்கு ஆட்கள் திரும்பிச் சென்றார்கள்.

சூரிய வெளிச்சம் எங்கும் பரவியதும் மகேந்திரனுக்கு அந்தப் பாதை நன்கு தென்பட்டது. உற்சாகத்துடன் மகேந்திரன் வித்தியாவதியை அழைத்துக் கொண்டு வழிநடந்தான். அவர்கள் மெதுவாக நடந்தவாறே உச்சி வேளைக்கு மலையின் அடிவாரப் பகுதிக்குப் போய்ச் சேர்ந்தார்கள்.

அங்கே ஓரிடத்தில் அவர்கள் அமர்ந்து சற்று இளைப்பாறினார்கள். அதற்குப் பிறகு அவர்கள் எழுந்து நடந்து வெகுதூரம் போய் மாலை வேளை வரும்போது சற்று



தூரத்தில் ஒரு குடிலை கண்டார்கள். அது தன்னை ஆசீர்வதித்து மோதிரம் கொடுத்தனுப்பிய முனிவரின் குடில் என மகேந்திரன் கண்டான்.

அவன் மகிழ்ந்து போய்த் தான் அணிந்திருந்த மோதிரத்தை ஒரு முறை பார்த்துக் கொண்டான். பிறகு அவன் வித்தியாவதியிடம் "அது எனக்குத் தெரிந்த முனிவரின் குடில். நான் உன்னைத் தேடிக் கிளம்பி வந்தபோது அந்தக் குடிலுக்குச் சென்றேன். அவர் என்னை ஆசீர்வதித்து எனக்குப் பாதுகாப்பாக இருக்கும் என்று இந்த மோதிரத்தை அளித்தார். அப்போது நான் அவரிடம் உன்னோடு திரும்பி வருகையில் தலைநகருக்குப் போகுமுன் அவரை தரிசித்துவிட்டே போவதாக வாக்குக் கொடுத்தேன். அதனால் நாம் அவரைக்காண அக்குடிலுக்குப் போகலாம்'' என்றான். வித்தியாவதியும் அவனோடு சென்றாள்.

அவர்கள் அக்குடிலை அணுகும் போதே குடிலிலிருந்து "வா, மகேந்திரா! நீ உன் முயற்சியில் வெற்றிபெற்று வருவாய் என்பது எனக்குத் தெரியும். உன்னோடு வந்திருக்கும் இளவரசி வித்தியாவதிக்கும் நல்வரவு கூறுகிறேன்'' என்று குரல் ஒலித்தது.

மகேந்திரனும் வித்தியாவதியும் குடிலுக்குள் போய் முனிவரை வணங்கினார்கள். மகேந்திரனும் "மகாத்மாவே! தாங்கள் நாங்கள் வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தீர்கள் எனத் தெரிகிறது. நாங்கள் இங்கே வரப்போவது தங்களுக்கு எப்படித் தெரிந்ததோ?'' என்று கேட்டான்.

முனிவரும் தன் கைவிரலில் அணிந்திருந்த மோதிரத்தைக் காட்டி "இந்த மோதிரத்திற்கும், உனக்கு நான் அன்று கொடுத்த மோதிரத்திற்கும் சில அரிய சக்திகள் உண்டு. நான் இந்த மோதிரத்தை அணிந்து கொண்டதால் இது உன்னை இந்த இடத்திற்கு வரும்படிச் செய்துவிட்டது'' என்றார்.

அதுகேட்டு மகேந்திரன் "அப்



படியா?" எனக்கூறி அவரை வணங்கினான். அவரும் "நீங்கள் இருவரும் இன்றிரவு இங்கேயே தங்குங்கள். நாளைக் காலையில் இங்கிருந்து கிளம்பிப் போகலாம்" என்றார்.

அன்றிரவு முனிவரிடம் மகேந்திரனும் வித்தியாவதியும் அதற்கு முன் நடந்தவற்றை எல்லாம் விவரமாகக் கூறினார்கள். அவரும் அவர்கள் கூறியதைக் கேட்டுப் புன்னகை புரிந்தார்.

மறுநாள் காலையில் முனிவர் மகேந்திரனையும் வித்தியாவதியையும் அழைத்து "நானும் உங்களோடு தலைநகரம் வர தீர்மானித்து விட்டேன். நான் உங்களோடு வருவதும் உங்களுக்குத் தக்க பாதுகாப்பாகவும் இருக்கும். மேலும் இவ்வளவு காலமாக நான் செய்ய வேண்டிய ஒரு நற்செயலை இப்போது செய்து முடிக்கும் வாய்ப்பையும் பெற்றிருக்கிறேன். அதைச் செய்து முடிக்க வேண்டியது என் கடமை" என்றார்.

"அப்படியா? நீங்கள் செய்ய நினைப்பது என்ன என்று நாங்கள் அறிந்து கொள்ளலாமோ?" என்று மகேந்திரன் பணிவுடன் கேட்டான். முனிவரும் "அதை அறிந்து கொள்ள வேண்டுமானால் நான் என் கடந்த கால வாழ்க்கை பற்றிக் கூறியாக வேண்டும். எனவே அதைக் கூறுகிறேன். கவனமாகக் கேளுங்கள்" எனக் கூறித் தன் வரலாற்றைச் சொல்லலானர்.

"மகிமைப்புரி என்ற நாடு பற்றி நீங்கள் கேள்விபட்டு இருப்பீர்கள். அதின் இளவரசன் வீரேந்திரன் அவன் சிறுவனாக இருக்கையில் ஒருமுறை அவனது தந்தை காட்டிற்கு வேட்டையாடப் போனார். அங்கு அவர் ஒரு விபத்தில் சிக்கி மாண்டு போனார். வீரேந்திரன் தன் இருப்பத்தோறாவது வயதில் நாட்டின் மன்னனானான். அப்போது அவனது தாய் தன் மகளான ஐஸ்வர்யாவை அவனிடம் ஒப்படைத்துவிட்டு மாண்டுபோனாள். வீரேந்திரன் தன் சகோதரியைப் பாதுகாத்ததோடு நாட்டை நல்ல

விதமாயும் ஆண்டு வரலானான். தன் சகோதரி ஐஸ்வரியாவை தன் அண்டை நாட்டு இளவரசனான சுரேந்திரனுக்கு மணம் செய்து வைத்தான். அவர்களுக்கு ஒரு ஆண் குழந்தையும் பிறந்தது. வீரேந்திரன் புனிதத் தலங்களை தரிசிக்கக் கிளம்பினான். அதனால் ஆட்சியை சுரேந்திரனிடம் ஒப்படைத்தான்.

வீரேந்திரன் நாட்டில் இல்லை எனத் தெரிந்து கொண்ட பாடலிபுர மன்னன் மகிமைபுரி மீது படை எடுத்து வந்தான். அதை அறிந்த சுரேந்திரன் விரைந்து வந்து பாடலிபுர மன்னனை எதிர்த்தான். போரில் சுரேந்திரன் மரணம் அடைந்தான். அவனது மனைவி ஜிதேந்திரனையும் தன் குழந்தையையும் கூட்டிக் கொண்டு எதிரிகளிடமிருந்து தப்பி ஓடினாள். வீரேந்திரன் யாத்திரை முடிந்து வந்தபோது பாடலிபுர மன்னன் அவனைப் பிடித்து சிறையில் அடைத்தான். அவன் சிறையிலேயே மரணமடைந்தான்.

ஜிதேந்திரன் தன் அண்ணியையும் அவளது மகனையும் கூட்டிக் கொண்டு பல இடங்களில் அலைந்து திரிந்து முடிவில் வீரபுரியை அடைந்தான். எப்படியோ காலம் கழிந்தது. ஜிதேந்திரன் ஒரு பெண்ணை மணந்து கொண்டான். ஆனால் திடீரென அவள் இறந்து போனாள். அதனால் அவனுக்கு வாழ்க்கை மீதே விரக்தி ஏற்பட்டது. அவன்



யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் வீட்டை விட்டு காட்டுற்கு ஓடிப்போய் ஒரு குடிசையைப் போட்டுக் கொண்டு சன்னியாசியாகி காலம் கழிக்கலானான். அவன் அநாதையாக விட்டு வந்த தன் அண்ணியையோ மகிமைபுரியின் சிம்மாசனத்திற்கு உரிமையாளனான அவளது மகனையோ பார்க்கப் போகவே இல்லை''.

இதைக்கூறி அவர் கண்ணீர் உகுக்கவே வித்தியாவதி "அந்த மகனின் பெயரைக் கூறவில்லையே'' என்றாள். அவரும் "அவன் பெயர் மகேந்திரன். அவன் சிற்றப்பா தான் ஜிதேந்திரனாகிய நான்'' என்று கூறி மகேந்திரனைக் கட்டித் தழுவிக் கொண்டார்.

பிறகு அவர் "நான் தலைநகருக்குப் போய் இரு வேலைகளைச் செய்தாக வேண்டும். மகேந்திரன் யார் என்பதை வீரபுரி மன்னனிடம் தெரிவிக்க வேண்டும். என் அண்ணியிடம் நான் அவர்களை தனியாக விட்டுப் போனதற்காக மன்னிப்பு கோர வேண்டும். அதன்பிறகு நான் திரும்ப இங்கே வந்து அமைதியான சூழ்நிலையில் காலம் கழிப்பேன்'' என்றான்.

மகேந்திரனும் வித்தியாவதியும் ஏதோ சொல்ல முயன்றார்கள். ஆனால் முனிவர் இடைமறித்து "நீங்கள் இருவரும் காவி உடைகளை அணிந்து கொள்ளுங்கள். நான் உங்களுடன் வருவதால் உங்களை என் சீடர்கள் எனப் பார்ப்பவர்கள் எண்ணுவார்கள். நாம் இப்போது கிளம்பினால் மாலையாகும்போது தலைநகரை அடைந்து விடலாம். பிறகு அரண்மனைக்குப் போகலாம்'' என்றார்.

மகேந்திரனும் வித்தியாவதியும் தாம் அணிந்திருந்த ஆடைகளைக் களைந்துவிட்டு காவி உடைகளை உடுத்திக் கொண்டார்கள். அதன் பிறகு அவர்கள் முனிவரோடு தலைநகருக்குக் கிளம்பினார்கள்.

**(அடுத்த இதழில் முடியும்)**






# ஏன் கூறினான்?

**த**ன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! உன்னை இந்தக் கடினமான வேலைச் செய்யச் சொன்னது யார்? உன் தந்தையா அல்லது உன் குருவா? சில சமயங்களில் இவர்கள் மிகக் கடுமையாக நடந்து கொள்வதும் உண்டு. இதற்குக் காரணம் அவர்களது கோபதாபமே. இதனை விளக்க உனக்கு தர்மசீலன் என்பவனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

பொம்மையூர் என்ற கிராமத்து மக்கள் தினமும் ஏதாவது ஒரு

## வேதாளம் சொல்லும் கதை



சண்டை சச்சரவில் இறங்கியே வந்தார்கள். ஒரு நாள் அவ்வூருக்கு தர்மசீலன் என்பவன் வந்தான். அவன் உடல் நலம் சரியாக இல்லாததால் அன்றிரவு அந்த ஊரில் தங்கிவிட்டு மறுநாள் கிளம்பிப் போகலாம் என எண்ணினான்.

அதனால் வழியில் போன ஒருவனிடம் எங்கே தங்கலாம் எனக் கேட்க அவனும் "இந்த ஊரில் ராமய்யன் வீட்டிலோ அல்லது ரங்கைய்யன் வீட்டிலோ இடம் கேட்டால் அவர்களில் யாராவது ஒருவர் தம் வீட்டில் இடம் கொடுக்கலாம். அவர்கள் அடுத்தடுத்த வீதிகளில் இருக்கிறார்கள்" என்று கூறிவிட்டுப் போனான்.

தர்மசீலன் முக்கி முனகிக் கொண்டு அந்த வீதியிலுள்ள பெரிய வீட்டை அடைந்து "இது தானே ரங்கைய்யன் வீடு?" என்று கேட்டான். அந்த வீட்டு வாசலில் நின்றவன் "இது ராமய்யன் வீடு. நான்தான் ராமய்யன். என் வீட்டிற்கு வந்து அந்த ரங்கைய்யன் பெயரைச் சொல்லும் துணிவு இந்த ஊரில் யாருக்கும் கிடையாது. போ போ" எனக்கூறி விரட்டி விட்டான்.

தர்மசீலன் அங்கிருந்து ரங்கைய்யன் வீட்டிற்கு மெதுவாக நடந்து சென்றான். இதற்குள் தர்மசீலன் ராமய்யன் வீட்டிற்குப் போன செய்தி ரங்கைய்யனுக்கு கிடைத்து விட்டது.

தர்மசீலன் ரங்கைய்யன் வீட்டை அடைந்த போது அவன் "அடி எடுத்து வைக்காதே. நீ முதலில் என்னை மதிக்காமல் அந்த ராமய்யன் வீட்டிற்குப் போனாய். அதனால் உனக்கு இங்கு இடம் கொடுக்க மாட்டேன்" என்று கூறி விரட்டினான்.

அதன்பின் தர்மசீலன் வேறு சிலரது வீடுகளில் தங்க இடம் கேட்க அவர்கள் ராமய்யனும் ரங்கையனும் இடம் கொடாத ஒருவனுக்குத் தாமும் இடம் கொடுப்பதற்கு இல்லை என்று கூறிவிட்டார்கள்.

தர்மசீலனும் ஊருக்கு வெளியே

ஒரு புதரருகே சென்றான். அங்கு பல சிறு செடிகள் முளைத்திருந்தன. அவற்றைப் பிடுங்கி எறிந்து படுக்க இடத்தைச் சுத்தம் செய்யலானான். அப்போது புதரிலிருந்து இரு நல்ல பாம்புகள் வெளியே வந்தன. அவை தர்மசீலனை ஒன்றும் செய்யாமல் போய் விட்டன. அதனால் அவன் மகிழ்ந்து அங்கேயே படுத்துத் தூங்கிவிட்டான்.

மறுநாள் அவன் கண் விழித்த போது தன்னை ஒரு மலைப்பாம்பு சுற்றிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவன் தன் உடலை நெளித்ததும் அந்தப் பாம்பு அவனை விட்டு விட்டுப் போய்விட்டது. அப்போது அவன் தன் உடலில் புதிய சக்தி வந்ததையும் தன் சோர்வு போனதையும் உணர்ந்தான். அதற்குக் காரணம் அந்தப் புதரில் அபூர்வ மூலிகைகள் இருக்க வேண்டும் என நினைத்து அங்கு நன்கு பரிசோதித்தான். அவன் ஒரு வைத்தியனே. அதனால் பல அபூர்வ மூலிகைகள் அங்கு இருப்பதை அவன் கண்டான்.

அப்போது சற்று தூரத்தில் ஒரே கூச்சல் கேட்டது. அதன் காரணம் என்ன என்று பார்க்க அவன் புதர் மறைவிலிருந்து வெளியே வந்தான். அங்கு மக்களின் இரு கோஷ்டியினர் பயங்கரமாகத் தாக்கிக் கொண்டு சண்டையிடுவதைக் கண்டான். அங்கு இரு வாலிபர்



கள் நினைவு இழந்து விழுந்து கிடப்பதையும் கண்டான்.

அவர்களில் ஒருவன் ராமய்யனின் மகன். மற்றவன் ரங்கைய்யனின் மகன். இவர்களிருவரும் வாய்ச் சண்டை போட்டு அடி தடியில் இறங்கினார்கள். அதனால் காயமுற்று நினைவு இழந்து விழுந்து கிடந்தார்கள். இதனால் ஆத்திரம் அடைந்த ராமய்யனும் ரங்கைய்யனும் தம் ஆட்களை திரட்டிக் கொண்டு வந்து விட்டார்கள். அதன்பிறகு அடி, வெட்டு, குத்து என்ற கூச்சல்தான்.

தர்மசீலன் நினைவு இழந்து கிடக்கும் இளைஞர் இருவரையும் பார்த்தான். அவர்கள் மெது

வாக மூச்சுவிடுவது கண்டு அவன் கூட்டத்தினரிடம் "நீங்கள் சண்டை போடுவதை நிறுத்துங்கள். நான் இவர்களுக்கு வைத்தியம் செய்து இவர்களைப் பிழைக்க வைக்கி றேன்" என்றான்.

உடனே கூச்சல் நின்றது. எல் லோரும் அமைதியுடன் நின்று பார்க்கலானார்கள். அப்போது ராமய்யன் தர்மசீலனைப் பார்த்து "நீதானே நேற்று உடல் நலம் இல்லை எனக்கூறிக் கொண்டு என் வீட்டிற்கு வந்தாய்? நீயா வைத் தியம் செய்யப் போகிறாய்?" என்று கேட்டான்.

தர்மசீலன் கொஞ்சமும் கோபப் படாமல் "நீங்கள் உங்கள் சண்டை களில் மூழ்கி இந்த ஊரிலுள்ள நல்ல விஷயங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளவில்லை. நான் கொடிய நோயால் அவஸ்தைப் பட்டு அதைப் போக்கச் சரியான மருந்து கிடைக்காமல் ஊர் ஊராகத் திரிந்து வந்தேன். இந்தப் புதர ருகே நேற்று ஒரு இரவு படுத்ததும் என் நோய் மறைந்தே போயிற்று. இங்கு பல அபூர்வ மூலிகைகள் உள்ளதையும் கண்டேன். இவை விஷப்பாம்புகளைக் கூட சாது வாக ஆக்குபவை. உயிர்போகும் நிலையில் உள்ளவர்களுக்கு அமிர் தம் போலாகி உயிர் கொடுப்பவை" என்றான்.

அப்போது ரங்கைய்யன் "சரி, நீ வைத்தியம் செய். அதில் ராமய்யன் மகன் பிழைத்து என் மகன் மட்டும்



பிழைக்காவிட்டால் உன்னை இங்கேயே வெட்டிப் போட்டு விடுவேன்'' என்றான். இதுபோல ராமய்யனும் எச்சரித்தான்.

தர்மசீலன் அங்கு கிடைத்த மூலிகைகளைக் கொண்டு அந்த இரு இளைஞர்களையும் உயிர் பெறச் செய்தான். அது கண்டு ராமய்யனும் ரங்கையனும் மகிழ்ந்து தர்மசீலன் தம் ஊரில் சில நாட்களாவது தங்கி தம் விருந்தினனாக இருக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள்.

அதற்கு தர்மசீலன் "ஆகா! அதுமட்டுமல்ல இவ்வூரில் நோயால் பீடிக்கப்பட்டவர்கள் பலர் இருக்கிறார்கள். அவர்களுக்கு மருந்து கொடுத்து குணப்படுத்தி விட்டுத் தான் போவேன்" என்று கூறினான்.

தர்மசீலன் வைத்திய சாஸ்திரம் மட்டும் கற்றவனல்ல. இதர சாஸ்திரங்களையும் கற்ற மகா பண்டிதன். அதனால் அவன் தினமும் இரவில் கிராமத்து மக்களை ஓரிடத்தில் கூட்டி அறிவுரைகளைக் கதைகளால் போதிக்கலானான்.

நாளாவட்டத்தில் அந்த ஊர் மக்களிடையே நல்ல மாற்றம் காணப்பட்டது. அவ்வூர் மக்களின் திறமை வெளிப்படலாயிற்று. மற்ற ஊர் மக்கள் அந்த ஊர்க்காரர்களை மதிக்கலாயினர். ஒரு வருட காலம் முடிந்ததும் அவ்வூர் மக்களுக்கு லாபமே கிடைக்கலாயிற்று.

இந்த நிலையில் தர்மசீலன் தான் அந்த ஊரை விட்டுப் போகப்





போவதாகக் கூறினான். ஆனால் ஊரார் அவன் போகக் கூடாது என்றும் அவன் அவ்வூரின் கிராம அதிகாரியாக இருக்க வேண்டும் என்றும் ஒரு மனதாக கூறினார்கள்.

தர்மசீலன் சற்று யோசித்து "நான் செய்ய வேண்டிய வேலைகள் கொஞ்சம் உள்ளன. அதனால் நான் ஊருக்குப் போய் என் மகனை அனுப்புகிறேன். அவனை உங்கள் கிராம அதிகாரியாக நியமியுங்கள்" என்றான். அவர்களும் அதை ஏற்றுக் கொண்டார்கள்.

தர்மசீலன் தன் ஊருக்குப் போய்த் தன் வீட்டாரிடம் நடந்ததை எல்லாம் சொன்னான். அவன் தன் மகனான குணபாலனை அனுப்பத் தீர்மானித்து அவனுக்கு அதற்காகப் பயிற்சியும் அளிக்கலானான். குணபாலன் நிர்வாக நுணுக்கங்களை எல்லாம் புரிந்து கொள்ள சில ஆண்டுகள் பிடித்தன.

ஐந்து ஆண்டுகள் பயிற்சி அளித்தபின் தர்மசீலன் திருப்தி அடைந்தவனாய் "நீ பொம்மையூருக்குப் போ. நான் ஒரு கடிதம் எழுதிக் கொடுக்கிறேன். அதை அவ்வூராரிடம் காட்டி நீ கிராம அதிகாரியாக ஆகி திறம்பட நிர்வகித்து வா! நானும் பிறகு வந்து உன்னைப் பார்க்கிறேன்" என்றான்.

குணபாலன் பொம்மையூரை அடைந்த போது அங்கு சாந்தபாலன் என்பவன் தானே தர்மசீலனின் மகன் எனக்கூறிக் கொண்டு அவ்வூரில் கிராம அதிகாரியாக இருப்பதைக் கண்டான். சாந்தபாலன் அங்கு வந்து நான்கு ஆண்டுகள் ஆயிற்றாம்.

குணபாலன் தன் தந்தை கொடுத்த கடிதத்தை ராமய்யாவிடம் கொடுத்தான். ராமய்யா அதைப் படித்து விட்டு ஆச்சரியப்பட்டு ஒரு சிலரோடு சாந்தபாலனின் வீட்டிற்குப் போய் விசாரித்தான். சாந்தபாலனோ தான் தர்மசீலனின் மகனே என அடித்துக் கூறினான். அதனை தர்மசீலனே கூடக் கூறுவார் என்றும்

அவன் சொன்னான்.

அப்போது குணபாலன் ராமய்யாவிடம் "எது சரியெனச் சொல்ல என் தந்தையால்தான் முடியும். அவரை உடனே இங்கே வரும்படி செய்தி அனுப்புங்கள்" என்றான். ராமய்யாவும் தர்மசீலனை உடனே கிளம்பி வருமாறு செய்தி அனுப்பினான்.

தர்மசீலன் அவ்வூருக்கு வந்து நிலமையை விசாரித்துத் தெரிந்து கொண்டான். சாந்தபாலனுடன் தனிமையில் பேசினான். சாந்தபாலன் அவனது கால்களில் விழுந்து வணங்கி "ஐயா! நான் பதவி மோகம் கொண்டு இங்கு வந்து கிராம அதிகாரியாக ஆகிவிடவில்லை. நீங்கள் இந்த ஊரை விட்டுப் போனதும் இவ்வூரார் முன்போல சண்டை சச்சரவுகளில் இறங்கினார்கள். அப்போது இவ்வூரிலுள்ள என் நண்பன் என் ஊருக்கு வந்து நிலைமையைக் கூறினான். அவன் யோசனைப்படி நான் தங்களது மகன் எனக்கூறிக் கொண்டு இந்த ஊருக்கு வந்தேன். இதன் கிராம அதிகாரியாகி இங்கு அமைதியையும் நிலைநாட்டினேன். உங்கள் முறைகளைக் கையாண்டே நிர்வாகம் நடத்தி வருகிறேன். உங்கள் மகன் நேராக ராமய்யாவிடம் போகாமல் என்னைக் காண வந்திருந்தால் இப்படி நடந்திருக்காது. இந்நிலையில் என்னைக்



காத்துக் கொள்ள நான் உங்கள் மகனே என்று கூற வேண்டியதாயிற்று. இப்போது நீங்கள் தாம் என்னை காப்பாற்ற வேண்டும்" என்றான்.

தர்மசீலனும் அவனுக்கு ஆறுதல் கூறி அவனை அழைத்துக் கொண்டு வந்தான். அவன் ஊராரிடம் "இவன்தான் என் மூத்த மகன். இவனை நான்தான் அனுப்பினேன். குணபாலன் எனது இன்னொரு மகன். அவனை நான் அழைத்துச் செல்கிறேன். சாந்தபாலனே இந்த கிராமத்தின் அதிகாரியாக இருக்கட்டும்" என்று கூறி எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு குணபாலனுடன்

தன் ஊரை அடைந்தான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! தர்மசீலனின் போக்கு விசித்திரமாக இல்லையா? தன் மகன் கிராம அதிகாரியாக வேண்டும் என்பதற்காகத்தானே அவன் குணபாலனுக்கு ஐந்து வருடகாலம் பயிற்சி அளித்தான்? இந்நிலையில் தன் மகன் எனப்பொய் சொல்லி கிராம அதிகாரியாகிவிட்ட சாந்தபாலனை அவன் ஊரார் முன் தன் மகன் எனக் கூறியது சரியா? இது குணபாலனுக்கு பெரிய இழப்பை அல்லவா ஏற்படுத்தி விட்டது? இதற்கு என்ன காரணம்? இக்கேள்விகளுக்குத் தக்க பதில்களைத் தெரிந்தும் நீ கூறாவிட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகி விடும்" என்றது.

விக்கிரமனும் "தர்மசீலன் மனதில் தன் மகன் குணபாலன் நிர்வாக விஷயங்களைப் புரிந்து கொள்ள ஐந்து வருடங்கள் பயிற்சி பெற வேண்டியதாயிற்றே என்ற மனத்தாங்கல் கொண்டுதான் இருந்தான். ஆனால் சாந்தபாலனோ எவ்விதப் பயிற்சியும் இல்லாம் நான்கு ஆண்டு காலம் கிராம அதிகாரியாக திறம்பட நிர்வாகம் நடத்தி வந்தான். அவ்வூராரின் ஒற்றுமைக்காகப் பாடுபட்டான். பதவி விஷயத்தில் மகன், மைத்துனன், என்று உறவுமுறை காட்டி அதைப் பெறுவது சரியல்ல. சாந்தபாலன் பொய் சொன்ன போதிலும் அது ஊராரை ஒற்றுமையுடன் வாழச் செய்து வந்தது. இதை எல்லாம் நினைத்துப் பார்த்தே தர்மசீலன் சாந்தபாலனைத் தன் மகன் எனக்கூறி அவனை கிராம அதிகாரியாகவே தொடர்ந்து இருக்கச் செய்தான்" என்றான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# அம்புலிமாமா அனுபந்தம்—52

நம் நாட்டுப் பறவைகளும், மிருகங்களும்:



## யானை

குழந்தைகள் புத்தகங்கள், பொம்மைகள் ஆகியவற்றை விரும்புவதைவிட யானைமீது ஏறி சவாரி செய்யவே மிகவும் விருப்பம் கொள்கின்றன. அண்மையில் நடந்த குடியரசுதின விழாவில் யானைகளும் பங்கு பெற்றன. இதுபோல் மைசூரில் தசராவின் போதும், ஜெயபூரிலும், கேரளாவில் திருச்சூரில் பூரத்தின் போதும் யானைகள் ஊர் வலமாக வருகின்றன. தென்னிந்தியாவில் சில கோவில்களில் உற்சவமூர்த்திகளை யானை மீது வைத்து ஊர்வலமாகச் செல்வதும் உண்டு.

முற்காலத்து மன்னர்களின் நாற்படைகளில் யானைப் படையும் ஒன்று. சந்திரகுப்த மௌரியனின் படையில் 10,000 யானைகள் இருந்தனவாம். உலகில் வாழும் ஜீவராசிகளில் மிகப் பெரியது யானையே. இதனைப் பழக்குவதும் எளிதே. இதனைப் பலவிதத்தில் பயன்படுத்துகிறார்கள்.

சாதாரணமாக யானையின் உயரம் 3 மீட்டர். இதன் நிறை 4000 கிலோவிலிருந்து 5000 கிலோ வரை இருக்கும். இதன் துதிக்கை 1.40 மீட்டர் நீளம். இதனை யானை மேலும் கீழும் ஆட்டும் போது அழகாக இருக்கும். துதிக்கை வழியாக யானை நீரை எடுத்துக் குடிக்கிறது. தரைமீது கிடக்கும் சிறு பொருளைக்கூட யானை தன் துதிக்கையால் எடுத்துவிடும். ஆண் யானைகளுக்கு இரு தந்தங்கள் உண்டு. இவை மிகவும் விலை உயர்ந்தவை.

யானைகள் கூட்டம் கூட்டமாய் வாழ்கின்றன. இவ்வளவு பெரிய யானைக்குக் கண்கள் மட்டும் சிறியவை. யானைக்கு ஞாபகசக்தியும் கேட்கும் திறனும் மிக அதிகம். யானை 22 மாதங்கள் கர்ப்பமுற்று குட்டி போடும். நம்நாட்டு யானைகள் ஆப்பிரிக்க யானைகளைவிட சிறியவை.

# நம் தற்கால இலக்கியம்

*பல மொழிகளையும், பல்விதப் பண்பாட்டுகளையும் கொண்ட நம் நாட்டில் ஒவ்வொரு மொழியிலும் உயரிய இலக்கியப்படைப்புகள் தோன்றி வருகின்றன. பலர் பண்டைய இலக்கியம் பற்றி அறிவார்கள். ஆனால் நம் நாட்டின் வெவ்வேறு மொழிகளில் வெளியாகும் தற்கால இலக்கியம் பற்றி அவ்வளவாக அறிந்திருக்க மாட்டார்கள். பல்வேறு இந்திய மொழிகளில் வெளியான உயர்ந்த கதைகள், புதினங்களின் சுருக்கத்தை இத்தொடரில் அளிக்கிறோம். இவற்றை இளைஞர்கள் உற்சாகத்துடன் படிப்பார்கள் என்றே நம்புகிறோம்.*

*ஆசிரியர்.*

## அகிலனின் 'பொன்மலர்'

சென்னை மருத்துவமனை ஒன்றில் பணிபுரியும் அழகிய பெண் டாக்டர் சங்கரி. பலரும் புகழும் அவளிடம் திருமூர்த்தி என்ற பணக்காரன் கர்ப்பிணியான தன் மனைவியைக் காட்ட வருகிறான். அவனைப் பார்த்து சங்கரி திடுக்கிடுகிறாள். ஏனெனில் முன்பு தன்னை நேசித்து ரகசியத் திருமணம் செய்து கொண்டு தன் வாழ்க்கையையே பாழடித்து திடீரென எங்கோ போய்விட்ட குருமூர்த்தியைப் போலவே உருவில் திருமூர்த்தி இருந்ததே அதற்குக் காரணம். இதன்பிறகே குருமூர்த்தியும் திருமூர்த்தியும் இரட்டையர்கள் என்பது சங்கரிக்குத் தெரிய வருகிறது.

குருமூர்த்தி இறந்து விட்டான் என்பதும் சங்கரிக்குத் தெரிய வருகிறது. ஆனால் திருமூர்த்திக்கோ அல்லது அவனது மனைவிக்கோ சங்கரிக்கும் குருமூர்த்திக்கும் இடையே ஏற்பட்ட காதல் பற்றித் தெரியாது.

சங்கரியின் மேற்பார்வையில் திருமூர்த்தியின் மனைவிக்கு சுகப்பிரசவம் ஏற்படுகிறது. அத்தம்பதிகள் மகிழ்ந்து சங்கரிக்குத் தம் நன்றியைத் தெரிவிக்கிறார்கள். பணக்காரத் திருமூர்த்தி விலையுயர்ந்த பரிசை சங்கரிக்கு அளிக்கிறான். உண்மையில் திருமூர்த்தி சங்கரிக்கு நன்றி மட்டும் தெரிவித்ததோடு நில்லாமல் அவளது அழகைக் கண்டு அவளை மணக்க விரும்புகிறான்.



கல்யாணமான திருமூர்த்தி தன்னை மணப்பதா என ஆச்சரியப்படுகிறாள் சங்கரி. அவள் திருமூர்த்தியைப் பற்றி விசாரிக்கிறாள். அவனுக்கு வாழ்வில் பணமே குறி என்றும், பணத்திற்காக எதையும் செய்வான் என்றும் அவனது முயற்சிகளில் குறுக்கிடுவோரை பணபலத்தால் அடக்கி விடுவான் என்றும் அவள் தெரிந்து கொள்கிறாள்.

ஒருநாள் திருமூர்த்தி குமுதா என்ற இளம் பெண்ணை டாக்டர் சங்கரியிடம் அழைத்து வருகிறான். அவளை அவன் ரகசியமாக திருமணம் செய்து கொண்டவன். அவளை விட்டுப் பிரிய அவன் அவளை மருத்துவமனையில் கொல்ல திட்டம் போட்டு அதற்கு சங்கரியின் ஒத்துழைப்பை அவன் நாடுகிறான். ஒருநாள் குமுதா திடீரெனக் காணாமல் போகிறாள். பிரச்னை தீர்ந்தது என மகிழ்கிறான் திருமூர்த்தி.

இச்சமயத்தில் சங்கரியின் சிறு பிராயத்து நண்பன் திருஞானம் அவளைக் காண வருகிறான். ஒரு காலத்தில் அநாதைப் பெண்ணாக இருந்த சங்கரிக்குப் பலவிதத்திலும் உதவியவன் அவன். சங்கரி அவனுக்கு திருமூர்த்தியின் அலுவலகத்தில் வேலை வாங்கிக் கொடுக்கிறாள். ஆனால் சங்கரி தன்னை மணக்க மறுத்ததால் திருமூர்த்தி கோபம் கொண்டு திருஞானத்தை வேலையிலிருந்து நீக்கி விடுகிறான். திருஞானம் இதனால் கவலைப்படவில்லை. ஏனெனில் அவன் திருமூர்த்தியின் பல ரகசியங்களைத் தெரிந்து கொண்டிருந்தான். அவன் உண்மையில் அரசாங்க உளவறியும் அதிகாரி.

திருமூர்த்தி திருஞானத்தையும் சங்கரியையும் கொல்லத் தன் ஆட்களை அனுப்புகிறான். ஆனால் அவர்களில் ஒருவன் கார் விபத்தில் இறக்கவே திருமூர்த்தி கைது செய்யப்படுகிறான். டாக்டர் சங்கரியின் பாதுகாப்பில்தான் குமுதா இருக்கிறாள் என்பது தெரிய வருகிறது.

திருஞானம் சங்கரியை மணக்க விரும்புகிறான். ஆனால் திருமூர்த்தியிடம் வேலை செய்த போது திருமூர்த்தியின் தங்கை ராஜேஸ்வரி அவனைக் காதலித்தது சங்கரிக்குத் தெரிகிறது. எனவே அவள் ராஜேஸ்வரியின் காதலுக்குக் குறுக்கே நிற்காமல் ஏழைகளுக்கு உதவும் நற்பணியில் தன்னை ஈடுபடுத்திக் கொள்கிறாள். அதனால்தான் டாக்டர் சங்கரி ஒரு பொன்மலர்.

தமிழ் எழுத்தாளர்களில் புகழ்பெற்ற அகிலனின் இயற்பெயர் பி. வி. அகிலாண்டம் (1922-1988). இவர் எழுதிய பொன்மலரில் பணக்காரர்கள் சிலரின் சுயநலத்தையும் சதிகளையும் விவரித்து டாக்டர் சங்கரியின் பொதுநலத் தொண்டையும் தியாகத்தையும் நன்கு எடுத்துக் காட்டியுள்ளார். அகிலன் சாகித்திய அகாடமியின் பரிசையும், ஞானபீட விருதையும் பெற்றவர்.

# உங்களுக்குத் தெரியுமா?

1. பொபோன்சாய் என்றால் என்ன?
2. சக யுகத்தை நிறுவியவர் யார்?
3. ஒரு கண்டமே ஒரு நாடாக உள்ளது. அது எது?
4. காந்திஜீ நிறுவிய முதலாவது ஆசிரமம் எது?
5. மிகப் பழமையான தேசிய கீதம் கொண்ட நாடு எது?
6. காஞ்சீபுர நெசவாளிகளுக்குள்ள ஒரு தனிப் பெயர் என்ன?
7. சினிமா கொட்டகையே இல்லாத நாடு எது?
8. புத்தர் நிர்வாண முக்தி அடைந்த தலம் எது?
9. மனித உடலின் நீளமான அவயம் எது?
10. வடஇந்தியாவில் கோமதி நதிக்கரையில் அமைந்துள்ள தலைநகர் எது?
11. நவீன இத்தாலியின் தந்தை எனப்படுபவர் யார்?
12. புதுடில்லியில் வைஸ்ராய் மாளிகையை நிர்மாணித்தவர் யார்?
13. தபால் தலையை முதலில் வெளியிட்ட நாடு எது?
14. இந்திய தேசிய காங்கிரஸ் தனது நூற்றாண்டு விழாவை எப்போது கொண்டாடியது?
15. ஏதன்ஸ் நகரில் 1894ல் நடந்த ஒலிம்பிக் போட்டிகளில் எவ்வளவு நாடுகள் கலந்து கொண்டன?

## விடைகள்

1. மண் தொட்டிகளில் வளர்ந்த மரம். இக்கலை அஸ்ஸாமில் தொடங்கியது.
2. கனிஷ்க சக்கரவர்த்தி.
3. ஆஸ்திரேலியா.
4. தென்னாப்பிரிக்காவில் 'போனிக்ஸ் பண்ணை' என டர்பன் சமீபத்தில் 1904ல் நிறுவப்பட்ட ஆசிரமம்.
5. ஜப்பான் 'கிமியாக்கா' கி.பி. ஒன்பதாவது நூற்றாண்டில் இயற்றப்பட்டது.
6. பட்டு நூல் நெசவாளர்.
7. சௌடி அரேபியா.
8. குசி நகரம்.
9. சிறுகுடல்.
10. லக்னோ.
11. கரிபால்டி.
12. சர் எட்வின் லுட்டின்.
13. இங்கிலாந்து.
14. 1985ல்
15. ஒன்பது.



# புளியோதரை படலம்

ராகவன் தாய் தந்தையர் இல்லாதவன். உற்றார் உறவினர் என்று சொல்லிக் கொள்ளவும் யாரும் இல்லை. அரசாங்க உத்தியோகம் கிடைத்ததால் தனி அறை எடுத்துக் கொண்டு தானே சமைத்து சாப்பிட்டு வந்தான். அவன் தயாரிக்கும் புளியோதரை பிரமாதம். அதனால் விடுமுறை, விசேஷ நாட்களில் அவன் தயாரிக்கும் புளியோதரையைச் சாப்பிட அவனது நண்பர்கள் அவனது அறைக்கு வந்து விடுவார்கள். அவனுக்கும் புளியோதரை ராகவன் என்ற பெயர் ஏற்பட்டு விட்டது.

அரசாங்க உத்தியோகத்திலுள்ள அவனைக் கல்யாணத் தரகன் கண்ணப்பன் விட்டு வைப்பானா என்ன? அவன் தன் அகடவிகட சாமர்த்தியங்களைக் காட்டி அலமேலு என்ற பெண்ணை அவனுக்குக் கல்யாணம் செய்து வைத்து விட்டான்.

அலமேலுவுக்கு சமையல், வீட்டு வேலைகள் செய்வதென்றால் பிடிக்காது. அவள் சோதிடம் ஆரூடம் கேட்பதில் ஆர்வம் கொண்டவள். அதனால் அவள் குடித்தனம் செய்ய வந்ததும் தன் கணவனையே சமைக்கச் சொல்லிவிட்டுத் தன் போக்கில் போகலானாள்.

ராகவனுக்கு இது ஏமாற்றமாக இருந்தது. அதுவரை அவனே சமைத்துச் சாப்பிட்டு வந்தான். கல்யாணமான பிறகு வாய்க்கு ருசியாகத் தன் மனைவி சமைத்துப் போடுவாள் என நினைத்தான். ஆனால் பழைய கதைதானா என்று மனம் புழுங்கினான். அலமேலுவோ அவன் சமையல் பிரமாதம் என புகழ்ந்து அவனையே சமைக்க வைத்தாள்.

—எஸ். சோபினி—



அலமேலு அதனால் தன் பிறந்த வீட்டிற்குப் போய் ஒரு வாரம் கழித்து வருவதாகக் கூறிக் கிளம்பி விட்டாள். சரியாக எட்டாவது நாள் மாலை தன் தாயாருடன் வந்து விடுவதாயும் அன்று சமையல் செய்து தயாராக வைத்திருக்கும் படியும் கூறிவிட்டுப் போனாள்.

எட்டாவது நாள் தன் மனைவியும், மாமியாரும் வருவார்கள் என எதிர்பார்த்து ராகவன் நிறைய புளியோதரை பிசைந்து வைத்திருந்தான். இரவு வெகு நேரமாகியும் அவர்கள் வரவில்லை. பத்து மணிக்கு தாடிப் பிச்சைக்காரன் ஒருவன் வந்து "அம்மா! தாயே! பசிக்கு சாதம் போடம்மா" என்று கத்தவே அவனுக்குப் போட்டான். அவனும் "இன்றும் புளியோதரையா" என்று கூறிக்கொண்டே சென்றான்.

இரவு பதினொன்று மணி அடித்தது. அப்போது ஒரு வெள்ளை உருவம் வீட்டினுள் நுழைந்து ராகவனின் முன் போய் நின்றது. ராகவன் அதைக் கண்டு பேயோ பிசாசோ என்று பயந்து போனான். அந்த உருவமும் "நான் பிசாசு தான் பயப்படாதே. உன்னை ஒன்றும் செய்யமாட்டேன். நீ செய்து வைத்துள்ள புளியோதரை வாசனை 'கம கம' வென்று வீசுகிறது. கொஞ்சம் கொடு. சாப்பிட்டுப் போகிறேன்" என்றது.

முதல் பத்து நாட்களுக்குப் புளியோதரையே பிசைந்து வைத்தான் ராகவன். பிறகு அலுத்துப் போய் ஒரு நாள் அவன் அலமேலுவிடம் "இன்று உன் சமையல். நான் போய் காய்கறி வாங்கி வருகிறேன்" எனக்கூறி பையை எடுத்துக் கொண்டு கடை வீதிக்குக் கிளம்பி விட்டான்.

அவன் திரும்பி வந்தபோது அலமேலு கையை உதறிக்கொண்டு துடித்துக் கொண்டிருந்தாள். அடுப்பில் உலை நீர் வைத்ததில் கை விட்டு விட்டாளாம். கை கொப்பளித்துப் போயிற்றாம். வேறு வழி ஏது? அன்றும் ராகவனே சமைக்க வேண்டியதாயிற்று.

ராகவனும் பயம் தெளிந்தவனாய் எழுந்து போய் ஒரு தட்டில் புளியோதரையை எடுத்து வந்து கொடுத்தான். பிசாசும் அதைச் சாப்பிட்டு விட்டு "ரொம்ப ஜோர்" என்று கூறிவிட்டுப் போயிற்று.

நள்ளிரவிற்கு மேல் திடீரென வெளிச்சம் தன் முகத்தின் மீது விழவே தூங்கிக் கொண்டிருந்த ராகவன் திடுக்கிட்டு எழுந்தான். தன் எதிரே அவ்வூர் காளி தேவதை நிற்பது கண்டு அவன் கைகூப்பி வணங்கி "தாயே ! நான் என்ன செய்ய வேண்டும் சொல். செய்து முடிக்கிறேன்" என்றான்.

காளி தேவதையும் "பக்தா! நீ செய்து வைத்திருக்கிற புளியோ தரையை எடுத்து வா. அதைச் சாப் பிட்டுத் திருப்தி அடைகிறேன்" என்றது. ராகவனும் புளியோ தரை வைத்திருந்த பாத்திரத்தை அப்படியே தூக்கி எடுத்து வந்து அதன் முன் வைத்தான். காளி தேவதையும் ஒரு பருக்கை விடா மல் சாப்பிட்டுவிட்டு "ரொம்ப நன்றாக இருக்கிறது" எனக்கூறி விட்டு மறைந்தது.

மறுநாள் காலையிலும் அல மேலுவும் அவள் தாயாரும் வராத தால் வீட்டைப் பூட்டிக் கொண்டு ராகவன் தன் அலுவலகத்திற்குச் சென்றான். காலை பதினோறு மணி இருக்கும். அப்போது ராக வனின் அடுத்த வீட்டுக்காரரின்



மகன் வந்து ராகவனிடம் "உங் கள் மனைவியும் அவர் தாயாரும் வந்து விட்டார்கள். வீட்டு சாவியை வாங்கிக் கொண்டு வரச் சொன் னார். சாயந்திரம் சீக்கிரமாகவே உங்களையும் வீட்டிற்கு வரச் சொன்னார்கள்" என்று கூறி வீட் டுச் சாவியை வாங்கிக் கொண்டு போனான்.

ராகவன் வழக்கம்போல அலு வலகம் மூடியபிறகே வீட்டிற்குக் கிளம்பினான். அவன் வீட்டிற்குள் நுழையும் போதே வெங்காய சாம் பார் வாசனை மூக்கைத் துளைத் தது. ராகவன் சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டு அலுமேலுவைப் பார்த்து "நீ ஏன் சிரமப்படு

கிறாய்? நான் நொடியில் புளியோதரை தயார் செய்து விடுகிறேனே'' என்றான்.

அதுகேட்டு அலமேலு "இனிமேல் நீங்கள் புளியோதரையே தயாரிக்கக் கூடாது. அதுமட்டுமல்ல, சமையலே செய்யக்கூடாது. நீங்கள் உங்கள் வேலையைச் செய்யுங்கள். நான் சமையலை இன்னும் பத்து நிமிஷத்தில் முடித்து விடுகிறேன்'' என்றாள்.

ராகவன் தன் காதுகளையே நம்பவில்லை. அலமேலுவா அப்படிச் சொல்கிறாள் என்று திகைத்து நின்றான். அலமேலு அப்படி திடீரென மாற என்ன காரணம் இருக்கும் என்று யோசிக்கலானான். முந்தைய இரவில் புளியோதரை சாப்பிட்டுப் போன பிசாசோ, காளிதேவதையோதான் அலமேலுவின் மனதை மாற்றி இருக்க வேண்டும் என அவன் எண்ணினான். அவனுக்கு தாடிக்காரப் பிச்சைக்காரனைப் பற்றிய நினைவே வரவில்லை.

அப்போது அலமேலு "இன்று நானும் என் அம்மாவும் இங்கே வந்த போது ஒரு தாடிக்கார சாமியார் வந்திருந்தார். அவர் என்னைப் பார்த்து "அம்மணி! இனிமேல் உன் கணவரை சமையல் செய்ய விடாதே. ஏனென்றால் புளியோதரை தயாரிக்கும் போது மரண கண்டம் அவருக்கு இருக்கிறது. அது எப்போது வேண்டுமானாலும் நிகழலாம்'' என்றார். அதனால்தான் இனிமேல் நம்வீட்டில் புளியோதரைக்குத் தடை. நீங்களும் சமையல் செய்யக் கூடாது'' என்றாள்.

ஓ! விஷயம் இதுவா! தாடிக்காரப் பிச்சைக்காரன் சாமியாராக நடித்து இனிமேல் தனக்குப் புளியோதரையே அந்த வீட்டில் கிடைக்கக் கூடாது என்பதற்காக இப்படிச் சொன்னானா? பேஷ். வாழ்க தாடிக்காரப் பிச்சைக்காரன் என்று ராகவன் மனதிற்குள் சொல்லிக் கொண்டு மகிழ்ந்தான்.





# மனிதப் பிசாசுகள்

பரமசிவம் மூன்று பெண்களின் தந்தை. ஏழையான அவன் எப்பாடு பட்டோ தன் மூத்த மகள் மரகதத்தைக் கல்யாணம் செய்து கொடுத்தான். ஆனால் மரகதத்தின் மாமியார் அவளைப் பிடுங்கி எடுத்தாள். அடிக்கடிப் பணம் கொண்டு வரச் சொல்லித் துன்புறுத்தி மருமகளைப் பிறந்த வீட்டிற்கு அனுப்பி வந்தாள்.

ஒருமுறை அந்த மாமியார் மரகதத்திடம் "நீ போய் ஐயாயிரம் ரூபாய் கொண்டு வா. அப்படிக் கொண்டு வராவிட்டால் உன் பிறந்த வீட்டிலேயே இருந்துவிடு. இங்கே வராதே" என்று கூறி அனுப்பி விட்டாள்.

மரகதம் தன் பிறந்த வீட்டிற்கு வந்து தன் தந்தையிடம் மாமியார் கூறியதைச் சொன்னாள். பரமசிவம் "சரி. இப்போது இவ்வளவு பணத்திற்கு எங்கே போவேன்! உன் கல்யாணத்திற்கு இருந்த பணம் எல்லாம் செலவாகிவிட்டது. இனி இருப்பது இந்த வீடுதான். இதை விற்றுப் பணம் கொடுக்கிறேன்" என்றான். மரகதமும் "வேண்டாம் அப்பா! இருப்பது இந்த ஒரே வீடு. இதையும் விற்றுவிட்டால் நீங்களெல்லாம் எங்கே போவீர்கள்? இன்னும் இரண்டு பெண்களுக்கு வேறு கல்யாணம் செய்தாக வேண்டும். அதனால் நான் என் கணவருடன் வாழப் போகப் போவதில்லை. இங்கேயே இருந்து விடுகிறேன்" என்றாள்.

பரமசிவமும் "நீ இங்கே இருந்துவிட்டால் மட்டும் பிரச்னைகள் தீர்ந்துவிடுமா? இன்னும் அதிகரிக்கத்தான் செய்யும். உன் தங்கைகளின் கல்யாணம் நடக்காது.

—க. சங்கரராமன்—



திற்கு ஒரு குட்டிப் பிசாசு வந்தது. அது தன் தாயுடன் சண்டை போட்டுக் கொண்டு அங்கு ஓடி வந்துவிட்டது. அது மரகதத்தை கண்டதும் சீண்ட நினைத்துத் தன் கோரைப் பற்களை காட்டி உறுமியது. மரகதமோ அதைக் கண்டு "ஐயோ பிசாசு" எனக் கத்தி அலறியவாறே வீட்டிற்குள் ஓடினாள்.

மரகதத்தின் அலறலைக் கேட்டு வீட்டிலுள்ளவர்களெல்லாம் விழித்துக் கொண்டனர். பரமசிவமும் "என்ன மரகதம்? ஏன் ஓடி வந்தாய்?" என்று கேட்டான். அவளும் "நம் வீட்டுக் கிணற்றருகே ஒரு பிசாசு இருக்கிறது" என்றாள்.

பரமசிவமோ பிசாசா? எங்கே இருக்கிறது? நம் வீட்டுக் கொல்லையிலா? இந்த வேளையில் நீ ஏன் அங்கே போனாய்?" என்று கூறிவிட்டு கொல்லையிலுள்ள கிணற்றின் பக்கம் சென்றான். தைரியமாக வரும் பரமசிவத்தைப் பார்த்து குட்டிப் பிசாசு பயந்து விட்டது.

அது அவனை வணங்கி "நான் என் தாயாரோடு சண்டை போட்டுக் கொண்டு இங்கே ஓடிவந்து விட்டேன். என்னை இங்கேயே இருக்கவிடு" என்றது. பரமசிவமோ "கூடாது. பெரியவர்களோடு சண்டை போடக்கூடாது. அவர்கள் சொல்வதைக் கேட்க வேண்டும். நீ உன் தாயாரிடமே போய் விடு" என்றான்.

அதற்கு உன்னைக் காரணமாக இடித்துக் கூறுவார்கள். நான் எப்படியோ சமாளித்துக் கொள்கிறேன். நீ பணத்துடன் உன் கணவன் வீட்டிற்குப் போ. அதற்கான ஏற்பாட்டை விரைவில் செய்கிறேன்" என்றான்.

அன்றிரவு மரகதத்திற்குத் தூக்கம் வரவில்லை. தான் இருப்பதால்தானே தன் தந்தைக்கு இவ்வளவு கஷ்டம் என நினைத்து தற்கொலை செய்து கொள்ள அவள் முடிவு செய்து கொண்டாள். அதற்காக எழுந்து அவள் கொல்லைப் புறத்தில் வேப்பமரத்தருகே உள்ள கிணற்றை நோக்கிச் சென்றாள்.

அப்போது அந்த வேப்ப மரத்

குட்டிப் பிசாசும் அவனது அறிவுரையை ஏற்றுத் தன் தாயாரிடம் போய்ச் சேர்ந்தது. அங்கு தன் தாயாரிடம் பரமசிவம் அறிவுரை கூறி அனுப்பியதைச் சொன்னது. தாய்ப் பிசாசும் "அந்த மனிதன் மிகவும் நல்லவன். உன்னை என்னிடம் அனுப்பி வைத்தான். அதற்காக அவனுக்கு உதவி செய்யலாம்" என்று கூறி ஒரு பை நிறையத் தங்க நாணயங்களை எடுத்துக் கொண்டு கிளம்பியது. கூடவே குட்டிப் பிசாசும் சென்றது.

பிசாசுகள் பரமசிவத்தின் வீட்டை அடைந்தபோது அவன் மரகதத்திடம் அவளது கணவன் வீட்டிற்கே போய் இருக்கும்படி அறிவுரை கூறிக் கொண்டிருந்தான். அப்போது தாய்ப் பிசாசு பணப்பையை அவன்முன் வைத்து "என் மகளை நல்ல வார்த்தை சொல்லி என்னிடம் அனுப்பி வைத்தாய். அதற்காக உனக்கு இதைக் கொடுக்கிறேன்" என்றது.

பரமசிவமும் அதை வாங்கிப் பார்த்து "அடேயப்பா! இவை லட்சம் ரூபாய்க்கு மேல் பெறுமே. வாழ்நாள் முழுவதும் சம்பாதித்தாலும் இவ்வளவு கிடைக்காதே" என்றான். அப்போது குட்டிப் பிசாசு தன் தாயாரிடம் "அம்மா! நான் கொஞ்ச நாளாவது இங்கே இருந்து விட்டு வருகிறேனே" என்றது.

அதுகேட்டுப் பரமசிவம் "இங்கே வேண்டாம். என் பெண்ணை அவளது மாமியார் வீட்டிற்கு அனுப்



பப் போகிறேன். வேண்டுமானால் அவளோடு போய் அங்கே நாலைந்து நாட்கள் இருந்துவிட்டு உன் தாயார் வீட்டிற்குப் போ'' என்றான். தாய்ப் பிசாசும் அதற்கு அனுமதி அளித்தது.

மரகதம் தன் தகப்பனார் கொடுத்த ஐயாயிரம் ரூபாயுடன் தன் மாமியார் வீட்டிற்குச் சென்றாள். பணத்தைப் பெற்றுக் கொண்ட அவளது மாமியார் முதல் நாள் அவளைப் புகழ்ந்து பேசினாள். ஆனால் மறுநாளே அவளைக் கொடுமைப்படுத்தலானாள்.

அதைக்கண்ட குட்டிப்பிசாசிற்குக் கோபம் வந்தது. அதனால் அந்த மாமியாரை அழவிட்டு வேடிக்கை பார்க்க நினைத்தது. மாமியார் எதைக் கையில் எடுத்தாலும் குட்டிப் பிசாசு அதைப் பிடுங்கி எறியலாயிற்று. அவளால் சரியாகச் சாப்பிட முடியவில்லை. தண்ணீர் கூடக் குடிக்க முடியவில்லை.

இதைக்கண்ட அக்கம்பக்கத்தார் ''நீ உன் மருமகளைப் படாதபாடு படுத்துகிறாய். அதனால் தெய்வம் உன்னை இப்படி தண்டிக்கிறது. இனிமேல் அவளைத் துன்புறுத்துவது இல்லை என்று கடவுளிடம் சொல்லி முறையிடு. அப்போது உனக்கு இந்த மாதிரி கஷ்டங்கள் ஏற்படாது'' என்றார்கள்.

மாமியாரும் எல்லோர் முன்னிலையிலும் இனிமேல் மரகதத்தைக் கொடுமைப்படுத்துவது இல்லை எனக் கூறி சத்தியம் செய்தாள். அப்போதே குட்டிப் பிசாசும் தன் குறும்புத்தனத்தை நிறுத்தி விட்டுத் தன் தாயின் இருப்பிடத்தை நோக்கிச் சென்றது.

வழியில் அது ''இந்த மனிதப் பிசாசுகள் நல்லவிதமாகத் திருந்துவதற்கு என் போன்ற பிசாசுகள் இருக்கத்தான் வேண்டும். அப்போதுதான் இவர்கள் வழிச்கு வருவார்கள்'' என்று நினைத்துக் கொண்டே போயிற்று.






**போ**ரில் மயில் ராவணன் இறந்தான் என்ற செய்தியை சந்திர சேனை சுவர்ச்சலா தேவியின் வாயிலாக அறிந்தாள். மச்ச வல்லபனுக்குப் பட்டாபிஷேகம் நடந்ததையும் அவள் கூறினாள். அவள் மேலும் "சந்திரசேனை! உன்னைப் பார்க்க இராமரே உன் இல்லத்திற்கு வந்து கொண்டிருக்கிறார்" என்றாள். அதைக் கேட்டு சந்திரசேனை மகிழ்ந்து போனாள்.

சந்திசேனை உடனே இராமரைத் தக்க விதத்தில் வரவேற்க ஏற்பாடுகளைச் செய்யலானாள். வாசலில் தோரணங்கள் கட்டினாள். சந்தனம், புஷ்பம் மற்றும் வாசனைத் திரவியங்களைத் தயாராக வைத்துக் கொண்டாள்.

கொஞ்ச நேரத்தில் அனுமார் முன்னே வர பின்னே இராமர் புன்னகை புரிந்தவாறே அங்கு வந்தார். இராமரைப் பார்த்ததும் சந்திரசேனை வெட்கத்தால் தலை குனிந்து கொண்டாள். தன்னையே அவள் மறந்து போனாள்.

அனுமார் சந்திரசேனையைக் கண்டு வணங்கி "அம்மணீ! நான் உனக்குக் கொடுத்த வாக்கின்படி இராமரை இங்கு அழைத்து வந்திருக்கிறேன்" என்றார். அனுமார் கூறியதைக் கேட்டு சந்திரசேனை கண் விழித்தாள். தன் எதிரே அமைதியான தோற்றத்துடன் இராமர் நிற்பதை அவள் கண்டு உடனே அவரது கால்களில் விழுந்து வணங்கினாள்.

—இராமர் திரும்பி வந்தார்—



அவள் தங்கத் தட்டை வைத்து இராமரது கால்களைக் கழுவினாள். அந்தக கழுவிய நீரை எடுத்துத் தன் தலைமீது தெளித்துக் கொண்டாள். அவரை மலர்களால் பூஜை செய்தாள். அவள் சந்தோஷ மிகுதியால் பேசக்கூட முடியாமல் வாயடைத்துப் போனாள்.

அவள் மௌனமாக இராமரை அழைத்துப் போய் மெத்தென இருக்கும் ஹம்சதூலிகா மஞ்சத்திற்கு அழைத்துச் சென்றாள். அங்குள்ள ஒரு மலர் மாலையை எடுத்து இராமரின் கழுத்தில் அணியப் போனாள்.

சந்திரசேனையின் கையிலிருந்து மலர் மாலை நழுவி இராமரின் காலடியில் விழுந்தது.

சந்திரசேனை பார்த்த பார்வையில் அனுமார் தன் சுய உருவோடு தோன்றினார். அவர் சந்திரசேனையிடம் "அம்மணீ! என்னை மன்னிக்க வேண்டும். அப்போதைய மனநிலையில் நான் உனக்கு வாக்களித்தேன். அதன்படி இராமரையும் உன் இருப்பிடத்திற்கு அழைத்து வந்து விட்டேன். நீ என்னவோ இராமரையே மணக்க விரும்புவது போலத் தெரிகிறது. அவர் ஏகபத்தினி விரதம் பூண்டவர். நீ அவரை வழிபடுவதுதான் உனக்கு நல்லது. வேறு எதையும் எதிர்பார்ப்பது முறையல்ல" என்றார்.

சந்திரசேனை ஏதோ சொல்ல விரும்பினாள். அவளால் பேசமுடியவில்லை. அப்போது இராமர் அறிவுரைகளைக் கூறி "சந்திரசேனையே! நான் எடுத்த இந்த இராமவதாரத்தில் நான் ஏகபத்தினி விரதத்தை மேற்கொண்டவன். அடுத்து நான் கிருஷ்ணாவதாரம் எடுக்கப் போகிறேன். அப்போது நீ சத்திய பாமாவாகப் பிறந்து என் பிரிய மனைவியாக விளங்குவாய்" என்று கூறினார்.

அப்போது சந்திரசேனை தன்னுள் ஒரு ஒளி பிறப்பதாக உணர்ந்தாள். அது அவளை ஒளிமயமாக்கி எதிரே விஷ்ணு மயமாய் நின்ற, இராமரோடு சேர்ந்து விட்டது. இந்த அற்புதக் காட்சியை அனுமார்

கண்டு பரவசமாகிக் கண்களை மூடிக் கொண்டு கை கூப்பி வணங்கினார். இராமர் அவரைப் புன்னகை பூத்த முகத்தோடு பார்த்தார். அனுமாருக்கு அப்போது நடந்ததெல்லாம் மறந்து போய் இராவணனை அழிப்பது ஒன்றே நினைவில் இருந்தது.



அப்போது பாதாள இலங்கையின் மன்னனாக முடிசூடப்பட்ட மச்ச வல்லபன் அங்கு வந்தான். அவன் இராமரையும் அனுமாரையும் வணங்கி அவர்களது ஆசிகளைப் பெற்றான். அவன் தன் பரிவாரங்களோடு வந்து இராமருக்குப் பிரிவுபசாரம் செய்து அனுப்பினான்.

அனுமார் இராமரையும் இலட்சுமணனையும் தம் தோள்களில் ஏற்றிக் கொண்டார். அவர் பாதாள லங்கையிலிருந்து பாய்ந்து ஆகாய வழியே சென்று இராவணனின் இலங்கையை அடைந்தார்.

இலங்காபுரியில் வானரர்கள் வானத்தையும் கடலையும் மாறி மாறிப் பார்த்துக் கொண்டே இருந்தார்கள். ஆம். அவர்கள் அனுமாரையும் இராமரையும் இலட்சுமணனையும் எதிர்பார்த்து நின்று கொண்டிருந்தார்கள். ஜாம்பவான் அவர்களை உற்சாகப்படுத்தி விரைவிலேயே அனுமார் இராமரையும் இலட்சுமணனையும் கொண்டு வந்து விடுவார் என்று கூறி வந்தார்.

இலங்காபுரிக்குள்ளோ இராட்சஸர்கள் கூத்தாடிக் கொண்டிருந்தார்கள். பலமாகக் கத்தி ஆர்பரித்துக் கொண்டிருந்தார்கள். மதுவைக் குடம் குடமாக குடித்துக் கொண்டிருந்தார்கள். இராவணனும் ஓரேயடியாக சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தான்.

இதற்குக் காரணம் மயில் ராவணன் இராமரது தலையையும் இலட்சுமணனின் தலையையும் எந்த நிமிடத்திலும் கொண்டு வருவான் என்பதுதான். அவற்றைத் தட்டில் வைத்து எடுத்துப் போய் சீதையிடம் காண்பிப்பதற்கான ஏற்பாடுகளை இராவணன் செய்



தும் வைத்திருந்தான்.

நேரம் ஆக ஆக இராவணன் பொறுமையை இழந்து கோட்டை மதில் சுவர் மீது நின்று மயில் ராவ ணன் வருகிறானா என்று பார்க்க லானான். அப்போது அவன் கண்ணில் கவலையுடன் இருக்கும் வானர சேனை தென்பட்டது. அங்கு விபீஷணன் நின்று கொண்டி ருப்பதையும் அவன் பார்த்தான்.

அவன் விபீஷணனைப் பார்த்து உரத்த குரலில் "தம்பீ! விபீஷணா! நீதான் எவ்வளவு அப்பாவி! இன்னமும் ஏன் வானரர்களோடு சேர்ந்து நிற்கிறாய்? உன் இரா மனின் தலையையும் இலட்சுமண னின் தலையையும் பாதாளலங் கைக் காளிதேவிக்கு மயில் ராவ ணன் பலியாக வெட்டி இருப் பான். இன்னும் சற்று நேரத்தில் அவற்றை மயில் ராவணன் கொண்டு வந்து என்னிடம் கொடுக் கப் போகிறான். அவற்றை நீ பார்க்க வேண்டாமா? இனிமேல் உன்னை யார் காப்பாற்ற இருக் கிறார்கள்? பேசாமல் என்னிடம் வந்து விடு. உன்னை மன்னித்து விடுகிறேன். இங்கே வசதியுடன் வாழலாம்" என்றான்.

இராவணன் கூறுவதைக் கேட் கச் சகியாமல் விபீஷணன் தன் காதுகளைப் பொத்திக் கொண் டான். இராமரையும் இலட்சு மணனையுமா பலியிடப் போகி றார்கள்? அதை நினைக்க நினைக்க விபீஷணனுக்குத் துக்கம் வந்தது. கண்களிலிருந்து கண்ணீர் வடிய லாயிற்று. அதுகண்டு சுக்கிரீவன் ஆறுதல் கூறி அப்படி எல்லாம் எதுவும் நடக்காது எனக் கூறினான். அவன் அப்படிச் சொன்னானே யொழிய அவனுடைய முகமும் வாட்டமுற்றுத்தான் இருந்தது.

இதையெல்லாம் கண்டு இராவ ணன் திருப்தியுடன் சிரித்துக் கொண்டான். கோட்டை மதில் ஓரமாகச் சென்று கொண்டிருந்த ராட்சஸப் பெண்களிடம் அவன் "நீங்கள் இப்போதே சீதையிடம் போய் நான் இராமனின் தலையை யும் இலட்சுமணனின் தலையை

யும் கொண்டுவந்து அவள் முன் வைக்கப் போவதாகச் சொல்லுங்கள். மயில்ராவணன் அவர்களது தலைகளைக் கொண்டு வந்து கொண்டிருப்பதாயும் அவர்களது உடல்களைப் பாதாள இலங்கை ராட்சஸர்கள் புசித்துக் கொண்டிருப்பதாயும் சொல்லுங்கள்'' என்று கூறி அனுப்பினான்.

அந்தப் பெண்கள் அவன் கூறியது ஏதோ ஒரு உற்சாகத்தில்தான் என்றும் மகிழ்ச்சி மிதமிஞ்சிப் போய் ஏதோ கூறியதாயும் நினைத்தார்கள். ஆனால் அதை வெளிக் காட்டாமல் பணிவுடன் வணங்கி அவன் கூறியபடியே செய்வதாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

இராவணன் கோட்டை மதிலிலிருந்து இறங்கித் தன் அரண்மனைக்குச் சென்றான். அங்கே ஒரு சன்னலருகே உட்கார்ந்து அவன் மயில் ராவணனின் வருகையை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான். வெகு தூரத்தில் வானத்தில் ஒரு கரும்புள்ளி தோன்றவே மயில் ராவணன்தான் வருகிறான் என இராவணன் எண்ணி மகிழ்ந்து கொண்டிருந்தான்.

அவன் ''ஆகா! அதோ மயில் ராவணன் இராமனின் தலையோடும் இலட்சுமணனின் தலையோடும் வந்து கொண்டிருக்கிறான். எங்கே தங்கத்தட்டு? அந்தத் தலைகளை அதில் வைக்க வேண்டும். உடனே



எடுத்து வாருங்கள்'' எனக் கத்தினான்.

கடற்கரையில் வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஜாம்பவான் ஆகாயத்தில் தொலைவில் கரிய உருவம் தெரியவே அதை உற்றுப் பார்த்தான். அது யார் என்பது அவனுக்குத் தெரிந்து விட்டது. அவன் அங்கதனைப் பார்த்துப் புன்னகை புரியவே அவனும் ''எல்லாம் நற்செய்தி தானே?'' என்று கேட்டான்.

ஜாம்பவான் ஓரிடத்தைச் சுட்டிக்காட்டி ''அதோ பாருங்கள். அனுமான் வந்து கொண்டிருக்கிறான். நம் கவலை எல்லாம் தீர்ந்தது'' என்று கூறவே எல்லா



களை நிறுத்தினார்கள்.

வானரர்கள் போட்ட கோஷங்கள் இராவணனின் காதிலும் விழுந்தது. அவன் சன்னல் வழியாக வானரர்களின் மகிழ்ச்சியைக் கண்டு திகைத்து நின்றான். இராமனும் இலட்சுமணனும் உயிருடன் திரும்பி வந்து விட்டார்களா? அப்படியானால் மயில் ராவணன் என்ன ஆனான்? அஹிராவணன் கதி என்னவாயிற்று? அவர்களை அனுமாரோ அல்லது இராமரோ கொன்று விட்டார்களா?

இவ்வாறு அவன் யோசித்துக் கொண்டிருக்கையில் ஒரு வீரன் வந்து இராவணனை வணங்கி "பிரபுவே! வானரர்கள் எல்லாம் அனுமார் வெற்றியுடன் வந்து விட்டதாகக் கூறி ஆடிப்பாடிக் கொண்டிருக்கிறார்கள். இராமரையும் இலட்சுமணனையும் அவர் கொண்டு வந்துவிட்டாராம் பாதாள லங்கையில் அவர்கள் மகத்தான வெற்றி பெற்றார்களாம். இப்படி எல்லாம் வானரர்கள் பேசுகிறார்கள்" என்றான்.

அதைக் கேட்ட இராவணனின் தலையே சுழன்றது. அவன் தன் நினைவு இழந்து பொத்தென விழுந்துவிட்டான். சற்று நேரத்திற்குப் பிறகு அவனது மயக்கம் தெளிந்தது. அவனது கோபமும் ஆத்திரமும் அதிகரித்தது. அவண கைகளால் ஓங்கிக் குத்தி "என்

வானரர்களும் மகிழ்ந்து போயினர். அங்கதன் உற்சாகத்துடன் "நம் அனுமார் சாமான்னியப்பட்ட வரா என்ன? அதோ! இராமரையும் இலட்சுமணனையும் சுமந்து கொண்டு வந்து கொண்டிருப்பதைப் பாருங்கள்" என்று உரக்கக் கூறினான்.

அனுமார் இராமரையும் இல்ட்சுமணனையும் தம் தோள்களில் உட்கார வைத்துத் தூக்கிக் கொண்டு வருவதைக் கண்டு வானரர்கள் கைகொட்டி ஆர்ப்பரித்தார்கள். வெற்றி வெற்றி என வான் அதிரக் கத்தினார்கள். அது இலங்கை நகருக்குள் கேட்கவே ராட்சஸர்கள் சட்டெனத் தம் ஆர்ப்பாட்டங்

ஆருயிர் மகனான இந்திரஜித்தைக் கொன்ற அந்த இலட்சுமணன் எங்கே? அவன் எங்கே ஒளிந்து கொண்டிருந்தாலும் தேடிக் கண்டு பிடித்துக் கொல்லத்தான் போகிறேன். அவன் வானரர்களிடையே தான் ஒளிந்து கொண்டிருப்பான். எங்கே தப்ப முடியும்? நான் அவனைப் பார்த்ததும் கண்ட துண்டமாக வெட்டிப் போட்டு விடுவேன்'' என்று கருவினான்.

இராவணனின் நிலையைக் கண்ட மண்டோதரி நிலைகுலைந்து போனாள். அவள் கண்ணீர் வடிப்பதைக் கண்டு இராவணன் ''வருத்தப்படாதே. அந்த லட்சுமணனைக் கொல்ல எனக்கு யாருடைய உதவியும் தேவை இல்லை. நானே அந்த இராமனையும் இலட்சுமணனையும் கொன்று அவர்களது தலைகளை வெட்டி எடுத்து வருகிறேன். அந்த மயில் ராவணன் வந்து என்னென்னவோ சொல்லி என் நேரத்தை வீணாக்கி விட்டான். அவனும் அவன் அண்ணனும் தொடை நடுங்கிகள். அதனால் தான் அந்த இராமன் அவர்களை எளிதில் கொன்று விட்டான். ஆகட்டும். முதலில் அந்த இலட்சுமணனைக் கொன்று விட்டுத்தான் மறு வேலை. எங்கே என் வாள்? கொண்டு வா. அவன் தலையை வெட்டி எடுத்து வருகிறேன்'' என்று உறுமினான்.

வானரசேனை சங்கு முழங்கி பேரிகைகளை ஒலிக்கச் செய்தது. அது நாராசம் போல இராவணனின் காதில் விழுந்தது. அவன் கண்கள் சிவந்தன. உடம்பே கிடுகிடுவென ஆடியது. கைகள் துடிதுடித்தன. அவன் உடனே வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு ''எங்கே அந்த இலட்சுமணன்?'' என்று கூவிக்கொண்டே தன் அரண்மனையை விட்டு வெளியே சென்றான்.






முன் காலத்தில் நேபாள நாடு மந்திரவாதிகள் நிறைந்ததாக இருந்தது. அங்கு சாதாரணப்பட்டவர்கள் கூட சில மந்திர சக்திகள் பெற்றிருந்தார்கள். ஒரு கிராமத்தில் வாமனன், என்பவன் இருந்தான். அவன் மாடுகள் மேய்ப்பவன். ஒரு நாள் அவன் மலையில் மாடுகளை மேயவிட்டு அங்குள்ள ஊர் சத்திரத்திற்கு வந்து தாகம் தணித்துக் கொள்ள அங்குள்ள கிணற்றிலிருந்து நீர் இழுத்துக் குடித்தான். அப்போது சத்திரக்காரனுடன் ஊரார் சிலர் பேசிக் கொண்டிருக்கவே வாமனனும் அவர்களோடு கலந்து கொண்டான்.

அப்போது பெரிய பண்ணையார் "என்ன வாமனா! நீ பாட்டிற்கு இங்கே வந்து விட்டாயே. மாடுகளைப் பார்த்துக் கொள்ளும்படி யாரிடமாவது சொல்லிவிட்டு வந்தாயா?" என்று கேட்டார். வாமனனோ "இல்லை. ஆனால் நான் இங்கிருந்தே எதைச் சொன்னாலும் அதன்படி மாடுகள் நடக்கும்" என்றான்.

அப்போது அவர் "எங்கே! இரண்டு மாடுகளை இப்போது வரவழை பார்க்கலாம்" என்றார். வாமனன் ஏதோ மந்திரம் உச்சரிக்க இரண்டொரு விநாடிகளில் சலங்கைகள் குலுங்க இரண்டு காளைகள் ஓடிவந்து வாமனனின் பக்கம் நின்றன. அதுகண்டு எல்லோரும் ஆச்சரியப்படவே வாமனனும் அக்காளைகளிடம் "சரி. இனி உங்கள் மந்தைக்குப் போங்கள்" என்றான். அவை உடனே சென்றன.

அதைக்கண்டு ஒருவன் "இவை மற்ற மாடுகளோடு போய்ச் சேருமா?" எனக் கேட்கவே

—நேபாள நாட்டுப் பழங்கதை—



வாமனனும் "சந்தேகம் இருந்தால் யாராவது போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள்" என்றான். இருவர் அக்காளையின் பின்னாலேயே போய் அவை தம் மந்தையில் போய்ச் சேர்ந்ததைப் பார்த்து விட்டு வந்தனர்.

இன்னொரு முறை இவ்வூர் பணக்காரர் ஒருவர் காளைக் கன்று வாங்க வாமனனை அழைத்துக் கொண்டு அடுத்த ஊர் சந்தைக் குச் சென்றார். அங்கு பல கன்று களைப் பார்த்துவிட்டு முடிவில் ஒரு காளைக் கன்றை வாங்கி வாமனனிடம் ஒப்படைத்து "நீ இதை ஓட்டிக் கொண்டு வா. நான் முன்னதாகப் போகிறேன்" என்று கூறிவிட்டுப் போனார்.

பணக்காரர் இருட்டும் போது தன் வீட்டை அடைந்தார். வாம னனோ அந்தக் காளைக் கன்றிடம் "நீ அவர் வீட்டில் போய் இரு. நான் இங்கு ஒரு வேலையை கவனித்து விட்டு வருகிறேன்" என்று கூறி அதை அனுப்பினான். அதுவும் அவனது ஊரிலுள்ள அவனது வீட்டிற்குப் போனது.

வாமனன் தன் வேலையை முடித்துக் கொண்டு இருட்டிய பிறகு தன் ஊரை அடைந்தான். அப்போது அவன் அந்தப் பணக் காரரின் வீட்டு வாசலை அடைந்த போது புதிய காளைக் கன்று உள்ளே போகாமல் வாசலிலேயே படுத்துக் கிடந்தது. வாமனன் அதை எழுப்பிய பிறகே அது எழுந்து பணக்காரரின் மாட்டுத் தொழுவத்திற்குள் போயிற்று!

அந்தக் காளைக் கன்று வாம னன் சொன்னபடி எல்லாம் நடந் தது. அப்படிப்பட்ட அந்தக் காளைக் கன்று ஒருநாள் அவனையே முட்ட வந்தது. அதுகண்டு அவன ஆச் சரியப்பட்டான். ஒரு நாளல்ல இரண்டு நாட்களல்ல, ஒருவாரம் இவ்வாறு அந்தக் காளைக் கன்று முட்ட வரவே, வாமனன் அது யாரோ ஒருவரின் செய்வினை என்று புரிந்து கொண்டான்.

அவன் உடனே ஒரு மரத்திலி ருந்து சிறுகிளைகளை ஒடித்து

துடப்பமாகக் கட்டி அந்தக் கன்றின் தொழுவத்தை அழுத்திப் பெருக்கலானான். அப்போது ஓரிடத்திலிருந்து "ஐயோ! அடித்துக் கொல்கிறானே" என்ற குரல் கேட்டது. அவன் திரும்பிப் பார்த்த போது அந்த தொழுவத்தில் வேலை செய்யும் ஒருவன் "நிறுத்து! நிறுத்து" என்று கத்திக்கொண்டே ஓடி வந்தான்.

அவன் முதுகில் பலகீறல்கள். அவற்றிலிருந்து இரத்தம் சொட்டிக் கொண்டிருந்தது. வாமனன் மந்திரம் சொல்லி தரையைப் பெருக்க அதனால் அந்த வேலையாளின் முதுகில் கீறல்கள் விழுந்தன! வாமனனும் "நீ உன் கை வரிசையை என்னிடமா காட்டுகிறாய்? இன்னொரு முறை இப்படிக் கன்றை ஏவினால் உன் உயிர் போய்விடும். ஜாக்கிரதை" என அவனை எச்சரித்து அனுப்பினான்.

அந்த வேலையாளும் மந்திர சக்தி கொண்டவனே. ஆனால் அவனது சக்தியை வாமனின் சக்தி அடக்கவல்லது. அதனால் அவன் பணிந்து போனான்.

ஒருமுறை கிராமத்தவர் சிலர் தம் வயல்களில் அறுவடை முடித்து தானியத்தை வண்டிகளில் ஏற்றித் தம் வீடுகளுக்கு அனுப்பிக் கொண்டிருந்தார்கள். ஐந்தாறு வண்டிகளோடு பத்துப் பனிரெண்டு



ஆட்களும் சென்று கொண்டிருந்தார்கள். அவர்களோடு வாமனனும் சென்றான்.

வண்டிகள் ஏரிக்கரையில் சற்று நின்றன. வண்டிக்காரர்கள் எருதுகளுக்குத் தண்ணீர் காட்டிக் கொண்டிருந்தார்கள். அதன் பிறகு அவர்கள் அங்கே சற்று இளைப்பாறலானார்கள். பொழுதைப்போக்க ஏதேதோ பேசிக் கொண்டும் இருந்தார்கள். அப்போது ஒருவன் "அதோ ஒரு நாய் ஓடுகிறது பார்" என்றான்.

எல்லோரும் அதைக் கண்டு ஆச்சரியப்பட்டார்கள். ஏனெனில் அதன் பின்னால் அதன் சொந்தக்காரன் செல்லவில்லை. அது மட்டு

மல்ல. அந்த நாய் ஒரு குறிப்பிட்ட இடத்திற்கு வேகமாக ஓடிக்கொண்டிருப்பது போலத் தோன்றியது.

வாமனன் அந்த நாயைக் கூர்ந்து கவனித்துவிட்டு "இந்த நாய் தானாக ஓடவில்லை. யாரோ ஏவி விட்டதால் ஓடுகிறது" என்றான். அப்போது ஒருவன் "இதை யார் எதற்காக ஏவிவிட வேண்டும்?" என்று கேட்டான்.

வாமனனும் "அதைத்தான் தெரிந்து கொள்ள வேண்டும்!" எனக்கூறி ஏதோ செய்தான். அப்போது நாய் திரும்பி தான் வந்த வழியே ஓடியது. சற்று நேரத்திற்குப் பின் ஒரு குதிரை மீது அமர்ந்து ஒருவன் வாமனனும் மற்றவர்களும் இருந்த இடத்திற்கு வந்தான். அவன் தன் குதிரையை நிறுத்தி கீழே இறங்கி "யார் என் நாயைத் திருப்பி அனுப்பியது?" என்று கோபத்தோடு கேட்டான்.

வாமனனோ "யாரோ? எங்களுக்கு என்ன தெரியும்? எங்களை ஏன் கேட்கிறாய்? யார் நீ? அதைச் சொல்லிவிட்டுப் போ" என்று வழிமறித்தான். மற்றவர்களும் அவனை சூழ்ந்து கொண்டார்கள்.

அவனும் "நான் மிருக வைத்தியன். என் நாயை ஏவி மந்தைகளில் மிருகங்களைக் கடிக்க வைப்பேன். பிறகு நான் போய் அம்மிருகங்களை வெறிநாய் கடித்து விட்டதாகக் கூறிப் பணம் பறிப்பேன். வெறியைப் போக்க அவை குடிக்கும் கழுநீரில் ஏதோ மருந்து கலப்பது போல நடிப்பேன். உண்மையில் என் நாய் வெறிபிடித்தது அல்ல. அதனால் அந்த மிருகங்களுக்கு ஒரு கெடுதலும் ஏற்படாது" என்றான்.

அவன் குட்டு வெளிப்பட்டது. அப்போது முதல் அவனை யாரும் தம் மிருகங்களுக்கு வைத்தியம் செய்யக் கூப்பிடவில்லை.





# அவதார ஆமை

பேரூரில் பஞ்சு சாஸ்திரி என்ற கதாகாலட்சேப பாகவதர் இருந்தார். அவரது வீட்டின் கொல்லையில் ஆழமான கிணறு ஒன்று இருந்தது. அதை அவர் பாதாள கங்கை என்று கூறிவந்தார். அதில் நெடுங்காலமாக ஒரு ஆமை இருந்து வந்தது.

பஞ்சு சாஸ்திரி ஒவ்வொரு ஆண்டு சித்திரை மாதம் தம் வீட்டின் விசாலமான கொல்லையில் பந்தல் போட்டு விஷ்ணுவின் தசாவதாரங்களைப் பற்றியும் குறிப்பாக ராமாவதாரம் பற்றியும் கதாகாலட்சேபம் செய்வது வழக்கம். பக்தர்கள் அங்குள்ள கிணற்றிலிருந்து நீர் இறைத்து கை கால்களை அலம்பிக் கொண்டு வந்து உட்கார்ந்து பக்தி சிரத்தையுடன் அவரது உபன்யாசத்தை கேட்பார்கள்.

அவர் தம் உபன்யாசங்களில் ''நீங்கள் எல்லோரும் கிணற்றிலுள்ள தவளைகள் போலவோ ஆமைகள் போலவோ இருந்துவிடாதீர்கள். பண்டிதர்கள் கூறுவதைக் கேட்டு நல்வழியில் செல்லுங்கள்'' என்று கூறலானார்.

அவரது கணீரென்ற குரல் பாதாள கங்கையில் வாழும் ஆமைக்கும் கேட்கவே செய்தது. அதுவும் ''நான் விஷ்ணுவின் கூர்மாவதாரம் போலத்தான் இருக்கிறேன். ஆனால் நானும் கிணற்றுத் தவளைப் போலவா இருக்கிறேன்? நான் கிணற்றிலிருந்து வெளியே சென்று என் சக்தியை வெளிப்படுத்த வேண்டும். இந்தப் பண்டிதர் கூறுவது போலக் கிணற்றுத் தவளையாக இருக்கக் கூடாது? என எண்ணியது.

ஒரு நாள் யாரோ கிணற்றில் வாளியை விட்டு தாம்புக் கயிறை

—சந்தியா கிருஷ்ணு—



ராட்டினத்தில் சிக்க விட்டு விட்டார்கள். இது அந்த ஆமைக்குச் சாதகமாயிற்று. அது அந்த வாளிக்குள் நுழைந்து கொண்டது. அப்போது பஞ்சு சாஸ்திரி கால் கழுவிக் கொள்ள வந்து வாளியை மேலே இழுத்தார். அதில் ஒரு ஆமை இருந்தது கண்டு ஆவென அலறினார்.

எல்லோரும் என்ன என்ன வென்று கேட்டுக் கொண்டு வந்தனர். பஞ்சு சாஸ்திரியும் "ஆகா! அந்த பகவானின் லீலையை என்ன என்பது! சற்று முன்தானே கூர்மாவதாரப் பெருமையைக் கூறினேன். இதோ பாருங்கள். பகவானே ஆமைவடிவில் வந்து நமக்குக் காட்சி அளிக்கிறார்" என்று சட்டென்று சாதுரியமாகக் கூறினார்.

எல்லோரும் அந்த ஆமையை மகாவிஷ்ணுவின் மறுஅவதாரமாகக் கருதி வணங்கினார்கள். பஞ்சு சாஸ்திரி அதை ஒரு பலகையில் வைத்து வீட்டிற்குள் தம் பூஜை அறைக்கு எடுத்துச் சென்றார். அங்கு அதை வைத்து அதற்குத் தேங்காய் பழம் நைவேத்தியம் செய்து கற்பூரம் காட்டினார். அறைக்கு வெளியே பக்தர்கள் நின்று கன்னத்தில் போட்டுக் கொண்டு 'நாராயணா! கோவிந்தா! கூர்மாவதாரக் கடவுளே' என்று உரக்கக் கூவினார். பலர் நாணயங்களைக் காணிக்கையாகவும் செலுத்தினார்கள்.

அது முதல் தினமும் மக்கள் அந்த ஆமையை தரிசித்து அதை மகாவிஷ்ணுவின் அவதாரம் எனக் கூறிக் காணிக்கைகள் செலுத்தலாயினர். ஆமைக்கும் தான் பகவானின் அவதாரம் என்ற எண்ணம் வந்து விட்டது. பஞ்சு சாஸ்திரிக்கோ காணிக்கை என்ற பெயரில் நிறையப் பணம் சேர்ந்தது. அவர் அதைக்கொண்டு ஐந்து ஏக்கர் நிலமும் வாங்கிவிட்டார்.

அப்போது ஊரில் சிலர் அந்த ஆமைக்கு ஒரு கோவில் கட்டத் தீர்மானித்தார்கள். கோவில் கட்டினால் தன் வருமானம் போய் விடுமே என பஞ்சுசாஸ்திரி பயந்

தார். அப்போது அவர் மனைவி தனக்கு சாமி வந்தது போல ஆடி "பக்தர்களே! நான் இப்போ துள்ள பூஜை அறையிலிருந்து வெளியே அடி எடுத்து வைத்தால் மாயமாய் மறைந்து விடுவேன்" என்றாள். அதை ஆமை ஆண்டவ னின் வாக்கு என மக்கள் ஏற்ற னர். அதனால் ஆமைக்கு கோவில் கட்டும் திட்டம் கைவிடப்பட்டது.

ஆனால் இதனால் ஆமைக்குக் கோபம் வந்தது தான் என்றென் றும் அந்த அறையில் அடைபட்டா கிடக்க வேண்டும்? இதைவிடக் கிணற்றில் இருப்பதே மேல் என அது எண்ணியது. பஞ்சு சாஸ் திரியோ ஆமைக்குக் கிடைத்த காணிக்கையில் மேலும் ஐந்து ஏக்கர் நிலம் தன் பேரில் வாங்கிப் போட்டார்.

பஞ்சு சாஸ்திரி இப்படிச் சொத்து சேர்ப்பதைக் கண்டு பொறாமை கொண்ட சிலர் ஆமை ஆண்டவன் எல்லோருக்கும் பொது என்றும் அதனால் அதற்கு வரும் காணிக்கையும் பொதுப்பணம் எனக்கூறி பஞ்சு சாஸ்திரியிடம் கணக்கு கேட்கலானார்கள்.

இதனால் பயந்த சாஸ்திரி ஒரு நாளிரவு யாருக்குத் தெரியாமல் ஆமையை எடுத்துப் போய் ஊர்க் குளத்தில் விட்டுவிட்டார். மறு நாள் ஆமையைக் காண வந்த பக் தர்களிடம் அவர் "பகவான் வந்த வேலை முடிந்து விட்டது போலி ருக்கிறது. அதனால் அவர் மாய மாய் மறைந்து விட்டார்" எனக் கூறினார்.

அதே சமயம் பஞ்சு சாஸ்திரி யின் மனைவிக்கு 'சாமி' வந்தது. அவள் "பக்தர்களே! நான் ஆமை ஆண்டவன். என் காரணமாக உங்கள் ஊரில் சண்டை ஏற்படு வதை நான் விரும்பவில்லை. அத னால்தான் இங்கிருந்து போய்விட் டேன்" என்றாள்.

எல்லோரும் சரிதான் என்று தலையை ஆட்டினார்கள்.






# உயிர்காப்பான் தோழன்

பாஸ்கரபுர மன்னன் பானுசேன னுக்கு ஒரே ஒரு மகன்தான் இருந் தான். அந்த அரச குமாரன் அந் நாட்டு மந்திரி குமாரனின் ஆரு யிர்த் தோழன். அவர்கள் இரு வரும் ஒருவரைவிட்டு மற்றவர் ஒரு விநாடி கூடப் பிரிந்து இருந்தது இல்லை.

இப்படியாகக் காலம் கழியும் போது அரச குமாரனின் விவாகம் இந்துபுரத்தில் நடக்க ஏற்பாடா யிற்று. அரச குமாரன் மந்திரி குமாரனைத் தன்னோடு யானை மீது ஏற்றி உட்கார வைத்துக் கொண்டு தன் பரிவாரத்துடன் இந்துபுரத்திற்குப் புறப்பட்டான். மாலையானபோது அவர்கள் பாகீரதி நதிக் கரையை அடைந்து அங்கு கூடாரம் போட்டுத் தங்கி னார்கள்.

சாப்பாடானதும் அரச குமா ரன் பயணக் களைப்பால் தூங்கி விட்டான். மந்திரி குமாரனுக்கோ தூக்கம் வரவில்லை. அவன் வான வெளியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது இரு தேவ கன்னிகைகள் பேசிக் கொண் டிருந்தது அவன் காதில் விழுந் தது.

ஒரு தேவகன்னிகை "இதோ தூங்குபவன் முன்பிறப்பில் பாவங் கள் புரிந்தவன். என்னை ஏமாற்றி என் சுகத்தைப் பாழாக்கியவன். அதனால் இவன் மீது எனக்கு வெறுப்பு. இவன் வாழக் கூடாது. இப்போது என் முத்து மாலை யைக் கழற்றிப் போடுகிறேன். நாளைக் காலையில் எழுந்து இதனை அவன் கையில் எடுத்த தும் இவன் உயிர் போய்விடும். அப் படியும் போகாவிட்டால் இவன் அதோ தெரியும் மாமரத்தில்

—கி. வெங்கடாசலம்—



தொங்கும் மாம்பழத்தைப் பறித்து சாப்பிட விரும்புவான். அப்பழத்தைச் சாப்பிட்டதும் அவன் உயிர் போய்விடும்'' என்றாள்.

அப்போது மற்ற தேவகன்னிகை ''இவன் இவற்றைச் செய்யாமல் உயிர் தப்பிவிட்டால் என்ன செய்வாய்?'' என்று கேட்டாள். மற்ற தேவகன்னிகையும் ''இவன் கல்யாண வீட்டில் நுழையும் போது வீட்டின் முன்பாகம் இடிந்து இவன் மேலே விழும். அதில் இறந்து போவான். இந்த கண்டத்திலிருந்து தப்பினால் இவன் படுக்கை அறையில் கல்யாணப் பெண்ணுடன் இருக்கும் போது பத்து முறை தும்முவான். அந்தப் பத்து முறைகளிலும் யாராவது ஒருவன் 'தீர்காயுசு' என்று கூறினால் இவன் உயிர் தப்புவான். இந்த கண்டங்களிலிருந்து மட்டும் இவன் தப்பிவிட்டால் அதற்குப் பின் இவனுக்கு மரணம் கிடையாது. இந்த ரகசியங்களை யாராவது இவனிடம் முன்கூட்டியே கூறி எச்சரித்தால் இருவரும் இறந்து விடுவார்கள். இந்த கண்டங்களிலிருந்து தப்பியபின் கூறினால் அவன் இறக்க மாட்டான்'' என்றாள்.

மந்திரி குமாரன் இதைக் கேட்டுக் கொண்டே இருந்தான். அந்த தேவகன்னிகைகள் மறைந்ததும் அவன் அரச குமாரனைக் காப்பாற்றத் தீர்மானித்துக் கொண்டான். மறுநாள் காலை அரச குமாரன் எழுந்த போது தன் காலின் கீழ் ஒரு முத்து மாலை கிடப்பதைக் கண்டு அதை எடுக்கப் போனான். ஆனால் மந்திரி குமாரன் சட்டென அதை எடுத்து ''இது மாயமாய் வந்த மாலை. இதை நீ தொடக்கூடாது'' என்றான்.

அப்போது அரச குமாரன் ''வா. அதோ தெரியும் மரத்திலிருந்து ஒரு மாம்பழத்தைப் பறித்துச் சாப்பிடலாம்'' என்றான். மந்திரி குமாரனோ ''வேண்டாம். அவை சாப்டிடத் தக்கவை அல்ல. ஏனென்றால் அவற்றில் ஒன்றைக்

கூட எந்தப் பறவையோ அணிலோ கடிக்கவில்லை பார்'' என்றான். அரச குமாரனும் மந்திரி குமாரன் சொன்னபடியே அதைப் பறிக்கப் போகவில்லை.

இந்துபுரத்தை அடைந்ததும் அரச குமாரன் கல்யாண வீட்டிற்குள் நுழைய அடி எடுத்து வைத்தான். அப்போது மந்திரி குமாரன் சட்டென அவனைப் பின்னுக்கு இழுத்தான். அப்போது வீட்டின் முன்பகுதி இடிந்து விழுந்தது.

கல்யாணமானதும் அரச குமாரன் மணப் பெண்ணுடன் படுக்கை அறைக்கு வந்தான். அதற்கு முன்பே மந்திரி குமாரன் அங்கு ஒளிந்திருந்தான். அரச குமாரன் அறைக்குள் வந்து தும்ம ஆரம்பித்தான். மந்திரி குமாரன் அவனது ஒவ்வொரு தும்மலுக்கும் 'தீர்காயுசு' என்று கூறலானான். பத்து தும்மல்கள் தும்மி முடிந்ததும் மந்திரி குமாரன் அந்த அறையை விட்டு வேகமாக வெளியே ஓடினான்.

அரச குமாரன் ''யாரோ திருடன். பிடியுங்கள்'' என்றான். எனவே வீரர்கள் மந்திரி குமாரனைப் பிடித்தார்கள். தன் நண்பனைக் கண்ட அரச குமாரன் ''நீயா!'' என ஆச்சரியத்துடன் கேட்டான்.

அப்போது மந்திரி குமாரன் அவனிடம் ''தேவகன்னிகைகள் பேசியதைக் கேட்டு நான் ஒவ்வொரு ஆபத்திலிருந்தும் காப்பாற்றி வந்தேன். ஆனால் இதை எல்லாம் உனக்கு முன்கூட்டியே கூறி எச்சரிக்கவில்லை. நான் மட்டும் முன்கூட்டியே உனக்குக் கூறி இருந்தால் நாம் இருவருமே இறந்திருப்போம். இனிமேல் பயமில்லை'' என்றான்.

அரச குமாரன் மந்திரி குமாரனைக் கட்டித் தழுவிக் கொண்டு ''நீதான் என் ஆருயிர் நண்பன்'' என்றான்.



## இயற்கை விநோதங்கள்

### விஷம் நிறைந்த தவளைகள்

தென்அமெரிக்கக் காடுகளில் விசித்திர நிறங்களில் அழகான சில தவளைகள் உள் ளன. இவற்றில் உடல் விஷமயமானது. சாதாரணமாய் சிவப்பும் மஞ்சளும் கலந்த நிறத்தில் காணப்படும் இத்தவளைகளின் உடலில் கருப்புப் புள்ளிகளும் கோடுகளும் தென்படும். இந்நிறம் இதனை அதன் எதிரி களிடமிருந்து காக்கிறது. இதன் அடிப் பாகத்தில் சுரக்கும் விஷத்தைக் காட்டு வேட்டைக்காரர்கள் எடுத்துத் தம் அம்பு முனைகளில் தடவி வேட்டையாடுகிறார் கள். இந்த அம்புகள் மிருகங்கள் மீது பட்ட தும் அவை தம் நினைவை இழந்து விழுந்து விடுகின்றன.




### மீன்கள் மூச்சுவிடும் விதம்

நீர்வாழ் மீன்கள் மூச்சு வாங்க நீர் மட்டத்திற்கு மேல்வர வேண்டியதில்லை. நீரிலிருந்து பிராணவாயுவைப் பிரித் தெடுக்கும் உறுப்பு இதற்கு உள்ளது. மீன் முதலில் தன் வாயைத்திறந்து நீரைக் குடிக் கிறது. அந்த நீரை அதன் உடலிலுள்ள சுவாசகோசங்கள் ஏற்று அதிலிருந்து பிராண வாயுவை எடுத்துக் கொள்கிறது. அப்படி எடுத்தது போக மீத நீரை மீன் வெளியே உமிழ்ந்து விடுகிறது. சுவாச கோசங்களி லுள்ள இரத்தக் குழாய்கள் பிராண வாயுவை ஏற்று உடலின் மற்றப் பகுதி களுக்கு அனுப்புகின்றன.




### மிகப் பழையது!

நான்கு ஆண்டுகளுக்கு முன் ஆஸ்திரே லியாவில் மெல்போர்ன் அருகே விதையு டன் கூடிய ஒரு செடி தென்பட்டது. அமெ ரிக்க ஏல் பல்கலைக்கழக விஞ்ஞானிகள் சோதனைகள் நடத்தி அது கூன்வாரா இனத் தைச் சேர்ந்தது என்றும் கருமிளகு போன்ற விதை கொண்ட அவ்வகைச் செடிகள் 12 கோடி வருடங்களுக்கு முன் தோன்றி அந்த இனம் அழியாமல் வளர்ந்து வருபவை எனக் கருத்து தெரிவித்துள்ளார் கள். அதில் ஒரு மலரும் இரண்டு இலைகள் மட்டுமேதான் இருக்கிறதாம்.






Your child and Coon
You just can't keep them apart.

# போட்டோ வாக்கியப் போட்டி :: பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1993 மே மாத இதழில் வெளியிடப்படும்**


M. Natarajan


M. Natarajan

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும். ★ மார்ச் 10ந் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ. 100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை-600 026**

---

## ஜனவரி மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ: **இரக்கம் உள்ளவன் இறைவன் ஆவான்**

இரண்டாவது போட்டோ: **இம்சை செய்பவன் அரக்கன் ஆவான்**

பரிசு பெற்றவர்: **திரு எஸ். ஏ. அனந்தராமன், புதுக்குடி**




**Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.**

வெகு தொலைவிலுள்ள உங்கள் உற்றார், உறவினர்களுக்கு நீங்கள் அளிக்க நினைக்க வேண்டிய அரிய பரிசு

# அம்புலிமாமா




**அவர் விரும்பும் மொழியில் இந்தப் பத்திரிகையை நீங்கள் அளியுங்கள்**

அஸ்ஸாமி, வங்காளி, ஆங்கிலம், குஜராத்தி, ஹிந்தி, கன்னடம், மலையாளம், மராட்டி, ஒரியா, சமஸ்கிருதம், தமிழ், அல்லது தெலுங்கு

**தாய் நாட்டில் இருப்பது போலவே இது அவரை வெளி நாட்டிலும் உணரச் செய்யும்**

சந்தாத் தொகை (ஆண்டிற்கு)

**ஆஸ்திரேலியா, ஜப்பான், மலேசியா, ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 105.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பிரான்ஸ் சிங்கப்பூர், யு. கே, யு. எஸ். ஏ, மேற்கு ஜெர்மனி, மற்றுமுள்ள நாடுகளுக்கு**

கடல் தபால் வாயிலாக ரூ. 111.00 விமானத்தபால் வாயிலாக ரூ. **252.00**

**பணத்தை நீங்கள் டிராப்டாகவோ மணியார்டராகவோ சந்தமாமா பப்ளிகேஷன்ஸ்** என எழுதி

சர்குலேஷன் மானேஜர், **சந்தமாமா பப்ளிகேஷன்ஸ்**, சந்தமாமா பில்டிங்க்ஸ், வடபழனி, சென்னை-600 026. என்ற முகவரிக்கு அனுப்பவும்

